கூடிய சீக்கிரம் வெளிவருகிறது

ஜெமினியின்

# சக்ரதாரி

நாகய்யா...புஷ்பவல்லி.

நாராயண ராவ், எ.எல்.கமலம், நாகர்கோவில் மகாதேவன்.



# Growing Up

## FASTER & STRONGER BECAUSE



அடமின் அவனுக்கு குன்றாத வீரியத்தையும் புஷ்டியையும் அளித்து அவனைத் தட்டி எழுப்புகிறது. அன்றாடம் அதிகமான அலுவல்களுக்குப் பிறகும் சிறிதுகூட அயராமல் சுறுசுறுப்பாகவும் புதுமையாகவும் இருந்து வருவதற்குக் காரணம் அடமினின் புஷ்டி நிறைந்த விடாமின்களால் தான்.

அடமின் - ஒவ்வொரு கிராம் எடையிலும் வைடமின் A-12,000 யூனிட்டும், வைடமின் D-1,000 யூனிட்டும் அடங்கிய ஷார்க் லிவர் ஆயிலின் திட ரூபம். இறக்குமதி செய்யப்படும் காட்லிவர் ஆயிலைவிட பதினைந்து முதல் இருபது மடங்கு அதிக வீரிய சக்தியளிக்கிறது. தவறாமல் அடமின் சாப்பிடுவதால் அதிக அளவில் வைடமின் சத்துக்கள் உடலில் சேரும்.




உட்கொள்ளும் அளவு:

குழந்தைகள்:
3 முதல் 10 துளிகள்

முதிர்ந்தவர்கள்:
10 முதல் 15 துளிகள்

தினந்தோறும், போஜனத்திற்குப் பிறகு, மும்முறை பாலுடனோ அல்லது ஆரஞ்சு சாறுடனோ, உட்கொள்ளவும்.

GOVERNMENT OIL FACTORY, CALICUT.

ADS.

# பேனா உலகில் ஒரு அதிசயம்!







நீங்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த பேனா இதுதான். ஐந்தே ரூபாய்க்கு மிகவும் அழகாய் செய்யப்பட்ட கோல்டன் பிளாட்டினம் பௌண்டன் பேனா என்றால் மிகவும் மலிவல்லவா? கவர்ச்சிகரமான ஐந்து நிறங்களில் வருகிறது. தூசி அடைவதைத் தடுத்து சரளமாக எழுதச் செய்வதில் பெயர் பெற்ற "தங்கம் போன்ற" முனையுடன் கூடியது. மிகவும் பொருத்தமாகவும் அழகாகவும் இயந்திரத்தினால் வார்க்கப்பட்ட நிக்கல் ஸில்வர் மூடியுடன் கூடியது. உங்களுக்கேற்ற பேனா இதுதான்!

**ரூ. 5/-**

இங்கிலாந்தில் செய்யப்பட்டது

புதிய கோல்டன்

# Platignum

"தங்கத்தைப் போன்றது"

வர்த்தக விசாரணைகளுக்கு முழு உரிமைபெற்ற வினியோகஸ்தர்கள்:

ஹுல்கர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட், 15, கங்குராம செட்டித் தெரு, மதராஸ்



Rexona
Rexona
Rexona

நான்காவது

கம்பர் மகாநாட்டு உதவி நிதிக்காக

சென்னை கம்பர் கழகத்தின் ஆதரவில்



# ஆனந்தி - ராதா

பரதநாட்டியம் - அபிநயம்

8-10-1948 வெள்ளிக்கிழமை

மாலை 6 மணிக்கு

சென்னை மவுண்ட் ரோடு

## ராஜாஜி ஹாலில்



நடன ஆசிரியர் ஸ்ரீ ராமையா பிள்ளை

**அபிநயத்திற்கு, ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பதங்கள் பாடுவார்.**

டிக்கட்டுகள்: ரூ. 25, ரூ. 10, ரூ. 5, ரூ. 2.

கிடைக்குமிடங்கள்:

1. மவுண்ட் பார்மஸி, 2/4, மவுண்ட் ரோடு
2. சாம்ஸன் & கோ, 8/22, பிராட்வே
3. மயிலை சங்கீத சபா, மயிலாப்பூர்
4. "கல்கி" காரியாலயம், கீழ்ப்பாக்கம்

நாரண-துரைக்கண்ணன், க. சோமசுந்தரம்
செயலாளர்கள்.

ஒலிபெருக்கி ஏற்பாடு

திருச்சி ரேடியோ செல்ஸ் & சர்விஸ்

# கல்கி

## பொருளடக்கம்

| மலர் 8<br>இதழ் 8 | செப்டம்பர் 19 | சர்வதாரி ஆ<br>புரட்டாசி 4 |
|---|---|---|






தலைப்பாகை கட்டிய கவர்னர் ஒருவர் சென்னை மாகாணத்தை ஆளப்போகிறார் என்று யாராவது கனவாவது கண்டிருக்க முடியுமா?

சென்ற மாதம் 27-ம் தேதி பம்பாயிலிருந்து சென்னைக்குப் புறப்பட்ட ஒரு டாடா விமானத்தில் ஏறக்குறைய முப்பத்தைந்து நாற்பது வயது மதிக்கத் தகுந்த ஒரு பிரமுகரும் பிரயாணம் செய்து வந்தார். பிரயாண முழுவதிலும் அவர் ரொம்பத் தமாஷாகவும் உல்லாசமாகவும் பேசிக் கொண்டு வந்தார். பக்கத்தில் இருந்த மற்றப் பிரயாணிகளுடன் ரொம்ப அன்பாக அளவளாவிப் பேசினார். எளிய முறையில் உடையணிந்திருந்த அவர் பார்வைக்கு ரொம்பவும் கம்பீரமாகக் காணப்பட்டார்.

விமானம் மீனம்பாக்கத்தை அடைந்தது. பிரயாணிகளில் ஒருவர் மற்றொருவரைப் பார்த்து, "இவர் யார்? ஒரு மகாராஜாவைப்போலக் காணப்படுகிறாரே!" என்று கேட்டார்.




"மகாராஜாவைப் போலவா? நன்றாயிருக்கிறது! இவர் மகா ராஜாவேதான்;—பவநகர் மகாராஜா. நம்முடைய சென்னை மாகாணத்துக்குப் புதிதாக நியமிக்கப்பட்டிருக்கும் கவர்னர் இவர்தான்!" என்று பதில் அளித்தார் அவர்.

"மகாராஜாக்களா! பூ. அவர்களுக்கு என்ன தெரியும்!" என்று உலகம் பரிகாசம் செய்த காலம் ஒன்று உண்டு. ஆனால் அந்தக் கெட்ட பெயர் இப்போது நீங்கிவிட்டது. தங்களுக்கும் தேச பக்தி உண்டு. இந்த மகத்தான புண்ணிய பூமியின் சரித்திரத்தை உருவாக்குவதில் தங்களுக்கும் பங்கு உண்டு என்பதை அவர்கள் உலகத்துக்குக் காட்டிவிட்டார்கள். நூற்றுக்கணக்கான இந்திய சமஸ்தானங்கள் கொஞ்சங்கூடத் தயங்காமலும் யோசிக்காமலும் இந்திய யூனியனிலே சேர்ந்து இந்திய சர்க்காரைப் பலப்படுத்தியதற்கு, அந்த சமஸ்தான மன்னர்களுடைய தேசபக்தியும் தியாக மனப்பான்மையுமே காரணம் அல்லவா?

அப்படிக் கொஞ்சங்கூடத் தயங்காமலும் முன் யோசனை செய்யாமலும் இந்திய யூனியனிலே முதல் முதலாகச் சேர்ந்த சில சமஸ்தானங்களிலே பவநகர் சமஸ்தானமும் ஒன்று.

பவநகர் சமஸ்தான மன்னரும் நம்முடைய தற்போதைய சென்னை மாகாண கவர்னருமாகிய மகாராஜா ஸ்ரீ ஸர் கிருஷ்ண குமார்ஸிங்ஜி பவஸிங்ஜி பதினேழு வயதிலேயே பட்டத்துக்கு வந்தவர். நிர்வாகத் திறமைக்கும் நேர்மைக்கும் புகழ்ப்பெற்றவர். மதுவிலக்கில் மிகவும் சிரத்தை கொண்டவர். அவரை இந்த மாகாணத்தின் கவர்னராகத் தேர்ந்தெடுத்த இந்திய சர்க்காரைப் பாராட்டுகிறோம்.

படத்தில், மேன்மைதங்கிய கவர்னர் பவநகர் மகாராஜாவின் அருகில் காணப்படுபவர் அவருடைய தர்மபத்தினியான ஸ்ரீமதி விஜயலக்ஷ்மிதேவி. [போட்டோ: நாகராஜ ராவ்.

# பலன் கிட்டுமா?




காயிதே ஆஜம் ஜின்னாவின் மரணத்தைக் குறித்து இந்திய சர்க்காரும் இந்திய மக்களும் தங்கள் மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். இதன் பயனாகவாவது பாகிஸ்தான் இந்தியாவுடன் சிநேகப்பான்மையைக் கைக்கொள்ளுமா?



மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 8

# என்ன சேதி?

## ரயில்வே போர்டார் கவனிப்பார்களா?

பெரிய ஸ்டேஷன்களிலும் பல ரயில் வண்டிகள் சந்திக்கும் ஜங்ஷன்களிலும் ஏராளமான ரயில் பாதைகள் இருக்கின்றன. எந்தெந்த வண்டி எந்தெந்தப் பாதையில் செல்ல வேண்டும் என்பதற்குத் திட்டம் இருக்கிறது. அந்தத் திட்டத்தைத் தவறின்றி நிறைவேற்ற வேண்டியது 'சிக்னல் மென்'னின் கடமையாகும். அதில் தவறு ஏற்பட்டால் உயிர்களுக்கும் சொத்துக்களுக்கும் மகத்தான நஷ்டம் ஏற்பட்டுவிடும். எனவே சிக்னல் மென்னின் அலுவல்கள் மிக மிகப் பொறுப்பு வாய்ந்தவை. ஒவ்வொரு வண்டியும் ஸ்டேஷனுக்குள் வரும்போதும் ஸ்டேஷனை விட்டுப் புறப்பட்டுச் செல்லும் போதும் பல உயிர்களும் உடைமைகளும் சிக்னல் மென்னின் கையில் ஒப்படைக்கப் படுகின்றன என்று கூறுவது மிகையாகாது.

மேற்படி உத்தியோகத்துக்கு வருவோர் குறைந்த பட்சம் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் தேறியிருக்கவேண்டும்; வைத்தியப் பரிசோதனையிலும் தேறவேண்டும்; ரயில்வே பள்ளிக்கூடத்தில் பயிற்சி பெற வேண்டும்; ரயில்வே சம்பந்தமான குறிப்பிட்ட சில பரீட்சைகளில் தேறவேண்டும். இத்தனை சடங்குகளையும் தாண்டிப் பொறுப்புள்ள சிக்னல்மென் வேலைக்கு வருவோரின் சம்பளம் என்ன என்று மாத்திரம் கேட்டு விடாதீர்கள். பல வருஷங்கள் சென்றாலும் கூடப் பெரும்பாலோர் விஷயத்திலும் அது மாதம் நூறு ரூபாய்க்குமேல் ஏறுவதில்லை! சிக்னல் கேபின்களுக்காக கோடிக் கணக்கில் செலவழிக்கும் எம். எஸ். எம். ரயில்வே போர்டார், அவற்றை இயக்குவிக்கும் சிக்னல்மென் விஷயத்தில் ஏன் கொஞ்சம் கருணை காட்டக்கூடாது? பொறுப்புக்குத் தக்கவாறு அதிக சம்பளம் வேண்டுமென்று சிக்னல்மென் கேட்டால், அது நியாயமற்ற கோரிக்கையென்று யார் கூறத் துணிவர்?

## விவசாய மந்திரிகள் நிர்மாணம்

சுவரின்றிச் சித்திரம் எழுதுவது எப்படி? அது போலவே குறிப்பிட்ட பிரச்னையை யொட்டிய புள்ளி விவரங்கள் எதுவுமின்றி அந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்குற்ற முறைகளை எவ்வாறு வகுக்க முடியும்? உலகில் முற்போக்குள்ள எந்த நாட்டிலும் தொழில் துறைகள் சம்பந்தமான சகல புள்ளி விவரங்களும் தயாரிக்கப்படுகின்றன. பிச்சைக்காரர்களைக் காணமுடியாத நாடுகள் இருக்கின்றன. ஆனால் இந்தியாவிலோ பிச்சைக்காரர்களின் தொகைக்கும் வேலையற்றோரின் தொகைக்கும் எல்லையுண்டா? அவை கணக்கு எடுக்கப்பட்டிருக்கிறதா? இல்லை.

தொழில் துறைகளை எடுத்துக் கொண்டாலும், விவசாயத்தையே உயிர்நாடியாகக் கொண்ட இந்தியாவில் விவசாய சம்பந்தமான புள்ளி விவரங்கள் எதுவுமில்லை! 1950-ம் வருஷம் இந்தியாவில் மேற்படி புள்ளி விவரங்களைத் தயாரிப்பதென்று புதுடில்லியில் நடந்த விவசாய மந்திரிகள் மகாநாட்டில் நிர்மானம் செய்திருக்கிறார்கள். இந்தியாவின் சுபிட்சத்துக்கு விவசாயம் அடிப்படையாக இருந்தும் கூட, பிரிட்டிஷார் அவ்விஷயத்தில் சிரத்தைகொள்ளாமல் இந்தியாவின் விவசாயத்தையே அந்தரத்தில் விட்டுவிட்டார்கள். இந்தியாவில் எத்தனை பூசல்கள், வேற்றுமைகள், விதண்டாவாதங்கள் இருந்தின்றன என்பதையெல்லாம் புள்ளி விவரங்களுடன் சிறிதும் விடாது புத்தகம் புத்தகமாக எழுதியுள்ள பிரிட்டிஷார், இந்தியாவில் எத்தனை பிச்சைக்காரர்கள் இருக்கின்றனர்? எத்தனை வேலையற்றோர் இருக்கின்றனர்? விவசாயிகளின் நிலைமை என்ன? அத்தகைய நிலைமைக்கு யார் காரணம்? இவற்றையெல்லாம் பற்றி வாயையே திறக்கவில்லை! அதன் விளைவாக நமது மந்திரிகள் இப்போது அஸ்திவாரத்திலிருந்து ஆரம்பிக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

# மகா ராஜதந்திரி ஜின்னா



பாகிஸ்தானைச் சிருஷ்டித்தவரும், பாகிஸ்தான் கவர்னர் ஜெனரலும், ராஜதந்திரக் கலையைக் கரை கண்டவருமான காயிதே ஆஜம் ஜின்னா காலமானதைக் குறித்துப் பாகிஸ்தான் மக்கள் துக்கத்தில் ஆழ்ந்திருக்கின்றனர்.

இந்திய மக்கள் சார்பில் கவர்னர் ஜெனரல் ராஜாஜியும் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவும் துக்கச் செய்தி அனுப்பியிருக்கிறார்கள்.

ஜனாப் ஜின்னா ஒரு காலத்தில் தனித் தொகுதி முறையையும் முஸ்லிம் லீகையும் வெறுத்தவர் என்பதைப் பலரும் மறந்திருப்பார்கள். அதுபோலவே ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்காக அவர் ஒரு காலத்தில் படாத பாடு பட்டார் என்பதையும பலர் மறந்திருக்கலாம்.

உலகத்திலே பல அதிசயமான மாறுதல்கள் ஏற்படுகின்றன அல்லவா? ஜனாப் ஜின்னாவின் போக்கு முற்றிலும் மாறியது அத்தகைய அதிசயங்களில் ஒன்றாகும்.

ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்ட ஜனாப் ஜின்னா பின்னர் ஹிந்து - முஸ்லிம் பிரிவினைக்காகத் தமது புத்தி, யுக்தி, சக்தி முதலிய சகலவற்றையும் உபயோகித்து அதில் உலகமே பிரமிக்கக்கூடிய விதத்தில் வெற்றியும் பெற்றார்.

அவர் பெற்ற அரசியல் வெற்றிகள் அவருடைய செல்வாக்கை அதிகப்படுத்தி, முஸ்லிம்களெல்லோரும் ஏகோபித்து அவரை ஆதரிக்கும்படிச் செய்தன. அதனால் முஸ்லிம்கள் சம்பந்தப்பட்ட வரையில் அவர் இட்டதே சட்டம் ஆயிற்று. அரசியல் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு அரசாங்கங்கள் அமைந்து வரும் உலகில், மதத்தை அடிப்படையாகக் கொண்டு அரசாங்கம் அமையும் புதுமை நிகழலாயிற்று!

கவி இக்பாலின் கற்பனையில் தோன்றிய பாகிஸ்தான், வெறும் கனவு என்று எல்லோராலும் கருதப்பட்ட பாகிஸ்தான், ஜனாப் ஜின்னாவின் ராஜதந்திரத்தால் உருவாகி உண்மையாகியது.

பாகிஸ்தான் என்ற இலட்சியத்தைத் தான் அவர் முக்கியமாகக் கொண்டாரேயன்றி, அதை அடைவதற்கான வழிகள் எப்படிப்பட்டவை என்பது பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை.

பிரிட்டனின் பிரித்தாளும் தந்திரத்தையும் சாத்துவிக மூர்த்திகளான இந்தியத் தலைவர்களின் சமாதான நோக்கத்தையும் ஜனாப் ஜின்னா ஒப்பற்ற ராஜதந்திரத்துடன் முற்றிலும் தமக்குச் சாதகமாக உபயோகித்துக் கொண்டு, தமது இலட்சியத்தில் வெற்றி பெற்றதற்குச் சரித்திரத்திலே உவமை காண்பதரிது.

*   *   *

ஜனாப் ஜின்னா ஆத்ம பலத்தை அடிப்படையாகக் கொண்ட உயர்ந்த கொள்கைகள் உடையவர் அல்ல. ஆனால் சமய சந்தர்ப்பங்களைத் தமக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக் கொள்ளும் ராஜதந்திரி. சமரசத்துக்குச் சுலபமாக இணங்கும் சுபாவம் அவரிடத்தில் இல்லை. தாம் கொண்டதே கோலம் என்று விடாப் பிடியாக நின்று காரியத்தைச் சாதிக்கும் இணையற்ற மனோ உறுதி வாய்க்கப் பெற்றிருந்தார்.

சென்ற பல வருஷங்களாக இந்தியாவில் நிகழ்ந்த முக்கிய அரசியல் சம்பவங்களையும் நெருக்கடிகளையும் பரிசீலனை செய்வோர் ஓர் உண்மையைத் தெரிந்து கொள்ளலாம். அதாவது அவைகளை ஜனாப் ஜின்னா தமக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொண்டு படிப்படியாக வெற்றி பெற்று வந்தார் என்பதுதான்.

காங்கிரஸ் தலைவர்களுக்கும் ஜனாப் ஜின்னாவுக்கும் எத்தனையோ தடவை சமரசப் பேச்சு வார்த்தைகள் நடந்தன. நம் தலைவர்கள் எவ்வளவோ விட்டுக் கொடுத்தார்கள். ஆனால் ஜனாப் ஜின்னா மாத்திரம் ஒரு சமயத்திலாவது ஓர் அங்குலம் கூட விட்டுக் கொடுத்ததில்லை. விட்டுக் கொடுக்காததுடன் இறுதியில் வெற்றியும் பெற்றார். அவருடைய வாழ்க்கையின் இரகசியம் அதில்தான் அடங்கியிருக்கிறது.

இந்தியாவைப் பிரிப்பது இந்தியர்களின் க்ஷேமத்துக்கு உகந்ததல்ல என்று தெரிந்தும் கூட, முஸ்லீம்களுடன் சமாதானமாகவும் சகோதர பாவத்துடனும் வாழ வேண்டும் என்ற ஒரே நோக்கம் கொண்டு நமது தலைவர்கள் பாகிஸ்தான் அமைவதற்கு இணங்கினர். ஆனால் பாகிஸ்தான் ஏற்பட்ட பின் நிகழ்ந்த சம்பவங்கள் அஞ்சா நெஞ்சம் படைத்த நம் தலைவர்களையும் திடுக்கிடச் செய்து விட்டன.

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் நல்லுறவு இருந்துவர வேண்டும் என்றும், இரண்டின் க்ஷேமமும் பரஸ்பர நட்பையே பொறுத்திருக்கிறது என்றும் இந்தியத் தலைவர்கள் அடிக்கடி கூறி வருகின்றனர். மற்றும் தங்களுடைய நல்லெண்ணத்தைக் காட்டுவதற்காகப் பாகிஸ்தானுக்கு எவ்வளவோ விஷயங்களில் விட்டுக் கொடுத்திருக்கின்றனர். அப்படியிருந்தும் இரு நாடுகளுக்கும் அன்னியோன்னிய பாவம் ஏற்படாதது வருந்தத் தக்கது.

எனினும் ஜனாப் ஜின்னாவின் மரணத்தால் மகத்தான துக்கத்தில் ஆழ்ந்துள்ள பாகிஸ்தான் பழைய சம்பவங்களை மறந்துவிட்டு இந்தியாவுடன் நட்புக் கொள்ள வேண்டும்.

ஜனாப் ஜின்னாவினால் உருவாக்கப்பட்ட பாகிஸ்தானில் இன்னும் அமைதி ஏற்படவில்லை. அங்கும் சர்க்கார் எத்தனையோ கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. பாகிஸ்தானும் இந்தியாவும் பரஸ்பரம் நட்புக் கொண்டுமாயின், பாதி இன்னல்கள் உடனே தீர்ந்துவிடும். மற்றவை தீருவதற்கும் ஒன்றுக்கொன்று உதவி அளிக்க முடியும்.

துக்ககரமான சம்பவங்கள் நிகழ்ந்தால் பகையை மறப்பது மானிட சுபாவம். இந்தியாவும் மகோன்னத புருஷரான மகாத்மா காந்தியை இழந்துவிட்டது. பாகிஸ்தானும் தன் இணையற்ற தலைவரை இழந்துவிட்டது. எனவே, இனியாவது பாகிஸ்தான் சென்றவற்றை மறந்து இந்தியாவுடன் ஒத்துழைக்குமாக.

# வெற்றிக் கொடி நாட்டுங்கள்!

ஜய பேரிகை முழக்கத்துடன் இந்திய வீரர்கள் ஹைதராபாத்துக்குள் பிரவேசித்து விட்டனர். எத்தனையோ கிராமங்களும் முக்கிய நகரங்களும் அவர்களின் வசமாகி இருக்கின்றன. ரஸாக்கர்களின் அட்டூழியங்களுக்கு இலக்காகிக் கண்ணீரும் கம்பலையுமாக சோகத்தில் ஆழ்ந்து கிடந்த கிராமவாசிகள் ஆனந்தக் கண்ணீர் பெருக எங்கணும் இந்தியத் துருப்புகளை வரவேற்கிறார்கள். அவர்களால் விடுதலை பெற்ற பிரதேசங்களிலெல்லாம் பாரதத் தாயின் மணிக் கொடி பறக்கின்றது. எங்கு பார்த்தாலும் ஜனங்களின் சந்தோஷ ஆரவாரம் ஒலிக்கின்றது.

சிசுபாலன் செய்த தவறுகளை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவினால் நூறு தடவைக்கு மேல் பொறுக்க முடியவில்லை. சிசுபாலனின் மூர்க்கத்தனத்துக்கு எல்லை இல்லையெனினும் பரமாத்மாவின் பொறுமைக்கு எல்லையுண்டு. நைஜாமின் பிடிவாதத்துக்கு எல்லை இல்லையெனினும், இந்திய சர்க்காரின் பொறுமைக்கு எல்லையுண்டு. அவர்களின் பொறுமை எல்லை கடந்து விட்டதால், இந்திய ராணுவ வீரர்களும் ஹைதராபாத் எல்லையைக் கடந்து விட்டார்கள்!

பல மாதங்களுக்கு முன்பே இந்திய சர்க்கார் ஹைதராபாத் விஷயத்தில் ராணுவ நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டிருந்தால்கூட, அவை நியாயமானவை என்று ஏற்பட்டிருக்கும். ஆனால் நமது மாபெருந் தலைவர்கள் அவ்வாறு செய்ய விரும்பவில்லை. கலியுக ராட்சஸர்களான ரஸாக்கர்கள் புரிந்த சகிக்க முடியாத அட்டூழியங்களைக் கூடச் சகித்தார்கள். எப்படியாவது ஹைதராபாத் பிரச்னையைச் சமாதானமாகத் தீர்க்க விரும்பினார்கள். நைஜாமின் அந்தஸ்துக்குப் பாதுகாப்பு அளிப்பதாகவும் உறுதி கூறினார்கள்.

கடைசியாக ராஜாஜியும் எவ்வளவோ முயற்சித்துப் பார்த்தார். சமரசத்துக்கு நைஜாம் இணங்கியிருந்தால், அவர் சரித்திரத்தில் புகழிடம் பெற்றிருக்கலாம். கோடிக்கணக்கான ஜனங்களின்

பாராட்டுதலுக்கும் உலகத்தின் நன்மதிப்புக்கும் ஆளாகியிருக்கலாம். பவநகர் மகாராஜா சென்னை கவர்னர் பதவிக்கு வந்திருப்பது போல நைஜாமும் ஒரு சமயம் இந்தியாவின் கவர்னர் ஜெனரலாகவும் வந்திருக்கலாம். ஆனால் துஷ்டர்களின் துர்போதனையும் நைஜாமின் பிடிவாதமும் எதேச்சாதிகார வெறியும் அவரைப் பரிதாபகரமான நிலைக்குக் கொண்டு வந்துவிட்டிருக்கின்றன.

நைஜாம் ஹைதராபாத்துக்கு சுதந்திர உரிமை கோருகிறார். இந்திய சர்க்கார் கோரியதும் ஹைதராபாத்தின் சுதந்திர உரிமைதான். ஆனால் நைஜாம் கோரிய உரிமைக்கும் இந்திய சர்க்கார் கோரிய உரிமைக்கும் சம்பந்தமே யில்லை.

நைஜாம் தமக்கும் தம்மைச் சூழ்ந்துள்ள ஒரு சிறு கூட்டத்துக்கும் சுதந்திரம் வேண்டும் என்கிறார். இந்திய சர்க்காரோ வெனில், ஹைதராபாத் சமஸ்தானத்திலுள்ள பெரும்பான்மையோரான ஜனங்களுக்குச் சுதந்திரம் வேண்டும் என்றனர்.

அவற்றில் யார் கோரியது எதேச்சாதிகாரம் என்பதிலும் யார் கோரியது ஜனநாயகம் என்பதிலும் எவருக்கும் சந்தேகம் இருக்க இடமில்லை

இந்தியாவின் கட்சி முற்றிலும் நியாயம் என்பதை ஒன்றிரு குழுவினரைத் தவிர உலகம் முழுதும் ஒப்புக் கொள்கிறது. அமெரிக்கா, பிரிட்டன் முதலிய நாடுகள் ஒப்புக் கொள்கின்றன. இந்தியாவிலுள்ள முஸ்லிம் பிரமுகர்களில் பலரும் ஒப்புக் கொள்கிறார்கள். ஹைதராபாத்திலுள்ள பல முஸ்லிம்கள் உள்பட பெரும்பாலோர் ஒப்புக் கொள்கிறார்கள். முஸ்லிம் நாடுகளுக்குப் பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்கும் அராபியர் லீக் கூட ஒப்புக் கொள்வதாகத் தெரிகிறது.

மேற்படி நியாயத்தை நைஜாம் அங்கீகரிக்காததுடன், மேற்கொண்டு ரஸாக்கர்களின் அட்டூழியங்களுக்கும் இடம் கொடுத்து விட்டதால், இந்திய சர்க்கார் சாம, தான முறைகளைக் கையாண்டு பார்த்துப் பலனில்லாமல், தண்டப் பிரயோகத்தில் இறங்கும்படி நேர்ந்திருக்கிறது!

* * *

நைஜாமுக்கும் இந்தியாவுக்கும் ஆரம்பமாகியுள்ள போருக்கும் ஜாதி மதங்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை.

இது எதேச்சாதிகாரத்துக்கும் ஜனநாயகத்துக்கும் நடக்கும் போர்; கொள்ளை, கொலை, தீ வைத்தல், கற்பழித்தல் போன்ற காட்டுமிராண்டித்தனத்துக்கும் சத்தியம், ஒழுக்கம் இவற்றை அடிப்படையாகக் கொண்ட நாகரிகத்துக்கும் நடக்கும் போர்; மிருக ஆட்சி முறைக்கும் மானிட தர்மத்துக்கும் நடக்கும் போர்.

நைஜாமின் ஆட்கள் எவ்வளவு பிரசாரம் செய்தாலும் மேற்படி உண்மையை மறைக்க முடியாது.

பல திசைகளிலிருந்தும் ஹைதராபாத்துக்குள் முன்னேறிச் செல்லும் இந்திய வீரர்களால் ஹைதராபாத்துக்கு மாத்திர மல்ல, ரஸாக்கர்களிடமிருந்து நிஜாமுக்குக்கூட விடுதலை கிடைக்கலாம்!

ஹைதராபாத்திலுள்ள ஹிந்துக்கள், முஸ்லிம்கள் முதலிய சகலருக்கும் எவ்வித பாரபட்சமு மின்றி பாதுகாப்பு அளிக்கப்படும் என்று இந்தியத் துருப்புகளின் தளபதி ஜெனரல் மகாராஜ் ராஜேந்திர சிங் உறுதி கூறியிருப்பதால், ஹைதராபாத் மக்கள் சகலரும் இந்தியத் துருப்புகளுடன் ஒத்துழைத்து, அராஜகமும் எதேச்சாதிகாரமும் நசிவதற்கு நீக்கி ஹைதராபாத்தில் அமைதியும், ஜனநாயகமும் நிலைவுதற்கு உதவி புரியவேண்டும்.

நைஜாமைப்போல் இந்தியாவிலுள்ள வேறெந்த மன்னர் நடந்து கொண்டாலும், இந்திய சர்க்கார் இராணுவ நடவடிக்கை எடுத்துக்கொண்டிருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. எனவே, இதில் 'மதத்துக்கு ஆபத்து' என்று துஷ் பிரசாரத்துக்கு லவலேசமும் இடமில்லை.

இந்நிலைமையில், இந்தியாவிலுள்ள சகலரும், ஹிந்துக்கள் முஸ்லிம்கள் முதலிய எல்லோரும் ஒற்றுமையுடன் இருக்க வேண்டும். எந்தச் சமூகத்தினராயினும் மதவெறிக்கு அணுவளவும் இடம் கொடுக்கக் கூடாது. இந்திய சர்க்காருடன் பூரணமாக ஒத்துழைக்க வேண்டும். ஹைதராபாத்தில் எதேச்சாதிகார ஆட்சியையும், கொள்ளைக்காரர்களின் ஆதிக்கத்தையும் ஒழிப்பதற்காக ஆயுதம் எந்தியுள்ள இந்திய சர்க்காரின் நன் முயற்சி பூரண வெற்றி பெறப் பிரார்த்திக்க வேண்டும்.

# எட்டயபுரத்தில் பாரதி திருவிழா



## பாரதியார் சங்க ஸ்தாபனம்

(நமது நிருபர்)

"**ம**கா கவி பாரதியார் தமிழன்பு படைத்த தமிழர்கள் எல்லாருடைய இருதயத்திலும் கோயில் கொண்டிருக்கிறார். தேச பக்தர்களுடைய நெஞ்சங்களில் கம்பீரமாக வீற்றிருக்கிறார். கவிதா ரஸிகர்களின் நாவில் சதா காலமும் குடிகொண்டிருக்கிறார். அவருடைய அமுத கவிதைகளில் என்றென்றைக்கும் செஞ்சீவியாக விளங்குகிறார். பாரதியாரின் பாடல்களைக் காட்டிலும் சிறந்த ஞாபகச் சின்னத்தை அவருக்குப் பிறராலே எழுப்ப முடியுமா? முடியாதுதான்.

ஆயினும் இந்த எட்டயபுரம் என்னும் புராதனச் சிறப்பு வாய்ந்த ஊரில் பாரதியார் பிறந்து விட்ட காரணத்தினால் இந்த ஊரிலுள்ள அன்பர்கள் அவருக்கு இங்கே ஒரு ஞாபகச் சின்னம் எழுப்ப வேண்டும் என்று எண்ணினார்கள். பாரதி இலக்கிய மன்ற அங்கத்தினரும் மற்றும் பலரும் இதைப் பற்றியே பகலில் சிந்திப்பதும் இரவிலே கனவு காண்பதுமாயிருந்தார்கள். பாரதியாரின் கனவுகள் பல காலாகாலத்தில் நிறைவேறியது போல, இந்த ஊர் பாரதி அன்பர்களின் கனவு நிறைவேறும் காலம் வந்தது:......"

மேற்கண்டவாறு "கல்கி" ஆசிரியர் செப்டம்பர் மீ 11உ எட்டயபுரத்தில் நடந்த பாரதி விழாவில் படித்த அறிக்கையில் குறிப்பிட்டிருந்தார். எட்டயபுரத்துப் பாரதி அன்பர்களின் கனவு நனவாகி, அழகிய கோபுரமும் மண்டபமும் புத்தக சாலையுமாகி, மாமல்லபுரத்துக் கற்கோயிலுக்கு நாகரிக உடை அணிவித்தது போல் பழமையும் புதுமையும் கலந்து ஜொலித்துக் கொண்டிருக்கிறது.

அத்தகைய அழகிய ஞாபகச் சின்னத்தைப் பாரதியார் பிறந்த ஊரில் எழுப்பியது அப்படியொன்றும் வீணான காரியம் இல்லையென்பது செப்டம்பர் மீ 11உ நன்கு வெளியாயிற்று. தமிழ் நாடெங்கும் உள்ள பாரதி அன்பர்களை ஓரிடத்தில் கொண்டு சேர்ப்பதற்கும் சிறப்பாக விழாக் கொண்டாடுவதற்கும் எட்டயபுரம் பாரதி மண்டபம் வாய்ப்பாக அமைந்திருக்கிறது.

**த**மிழ்நாட்டில் தற்போதுள்ள பாரதி அன்பர்களில் முதல்வரான பேராசிரியர் வ. ரா. இந்த வருஷத்துப் பாரதி விழாவுக்குத் தலைமை வகித்தார். கனம் மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் பாரதி மண்டபத்தில் புத்தக சாலையைத் திறந்து வைத்தார். கனம் மாதவமேனன், ஸ்ரீ குட்டியம்மாளு அம்மாள், எட்டயபுரம் மகாராஜா, ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார், திருப்புகழ் மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், ஸ்ரீ கே. பாலசுப்ரமணிய ஐயர், "கல்கி" மானேஜர் ஸ்ரீ டி. சதாசிவம், ஸ்ரீ எம். சி. வீரபாகுப் பிள்ளை, தூத்துக்குடி முனிசிபல் சேர்மன் ஸ்ரீ கர்தாரவடிவேல் நாடார், திருநெல்வேலி நகரசபைத் தலைவர் ஸ்ரீ ப. ராமஸ்வாமி, பாரதியாரின் மற்றொரு பிரபல சீடர் ஸ்ரீ ஹரிஹர சர்மா, பாரதியாரின் தாய் மாமன் ஸ்ரீ சாம்பசிவய்யர், தூத்துக்குடி ஸ்ரீ வி. துரைசாமி நாடார், சங்கரன் கோவில் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம், கோவில்பட்டி ஸ்ரீ சண்முகம் பிள்ளை முதலியவர்கள் விழாவுக்கு விஜயம் செய்து சிறப்பித்தார்கள்.

பேராசிரியர் வ. ரா. அவர்களின் அருமையான தலைமைப் பிரசங்கத்தைத் தினப் பத்திரிகைகளில் நேயர்கள் படித்து மகிழ்ந்திருப்பார்கள்.

"மிகவும் மெல்லிய உடல். குச்சிகள் போலக் கைகளும் கால்களும். ஆனால் கைகளைத் தொட்டால் பட்டுப்போல் மிருதுவாக வழவழ என்றிருக்கும். மாநிறம். கம்பீரமும் பொலிவும் கொண்ட முகத்தோற்றம். பிறர் உள்ளத்தைப் பார்த்தவுடனேயே அளந்து கட்டும் களையான கண்கள். வசீகரமான முகம். கூர்த்தியான நாசி. சங்கீதத்துக் கென்றே அமைந்த

...தால். அந்தக் குரலில் ...து மெய் மறந்து போய் ... பேராசிரியர் வர்ணித்த ... அங்கு நேரில் பிரத்யட்ச ... தோன்றியது.

...யும் அனுபவ சமரசக் ...ஞதத்தவ சாஸ்திரத்தக்குப் ...ம் இருப்பிடமாயும் விளங்கிய, ...வியின் இணையில்லாத பக்தனுக ...கவிதையின் கடைசி எல்லையைக் ...ர்த்தது போல அவ்வளவு உருக்க ... சேர்த்தியாயும் வன்மையுடனும் ...வு நிறைந்தும் பாடிய பாரதியைப் ... என்று அழைத்து அவரை வணங்கு ...ம். அவர் தமிழ் நாட்டுக்கு மட்டும் ...த மல்ல; அவர் உலக மகா கவி!'' ...று முதல் எழுத்தாளர் வ. ரா. அவர்கள் ...லைமை உரையை முடித்துத் திருவிழாப் பந்தலில் கூடியிருந்த ஐயாயிரம் ஜனங்களை யும் உற்சாகக் கடலில் மூழ்கச் செய்தார்.

பிரதம மந்திரி கனம் ஓமந்தூர் ரெட்டியார் அவர்கள் விழாவின் வெற்றியைக் கோரி அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்தி படிக்கப்பட்ட பிறகு எட்டயபுரம் பஞ்சாயத்துப் போர்டின் சார்பாகப் போர்டின் தலைவர் ஸ்ரீ கந்தசாமி செட்டியார் வ. ரா. வுக்கு வரவேற்புப் பத்திரம் படித்தளித்தார். கனம் பக்தவத்ஸலம், கனம் மாதவமேனன், ''கல்கி'' ஆசிரியர் இவர்களுக்கும் வரவேற்புப் பத்திரங்கள் அளிக்கப்பட்டன. வரவேற்புப் பத்திரங்கள் மிக அழகான வன்மையும் ஒட்டமும் உள்ள தமிழ் நடையில் எழுதப் பட்டிருந்ததை அனைவரும் ரஸித்தார்கள்.

பாரதி மண்டப புத்தகசாலையைத் திறந்து வைத்துவிட்டு வந்த கனம் பக்தவத்ஸலம் அன்று பிரமாதமான இலக்கியப் பிரசங்கம் ஒன்று செய்தார். பெருந் தமிழ்ப் புலவர்களும், பாரதியாரைத் தங்கள் சொந்த உடைமையாகக் கருதுகிறவர்களும் மூக்கில் விரல் வைத்து அதிசயிக்கும்படி இருந்தது. அதை வெல்லாம் சரியாக எழுதிக்கொள்ளத் தமிழ் சுருக்கெழுத்துத் தெரியவில்லையே என்று எனக்கு வருத்தமாயிருந்தது.

''இப்பொழுது தமிழை வளர்ப்பதுபோல பாசாங்கு செய்கிறவர்களும் பிற மொழியினல் தமிழ் கெட்டுவிடும் என்று சொல்கிறவர்களும் தமிழைக்கூட நன்ருகப் படித்து அறியாதவர்கள். பாரதியாரோ பல பாஷைகளை நன்கு கற்று உணர்ந்தவர். 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணேம்' என்றும் 'பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்; இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்' என்றும் பாரதியார் சொல்லி யிருக்கிருர்.

''தமிழுக்குப் புத்துயிர் தந்த பாரதியார் இவ்விதம் பல பாஷைகளைக் கற்கவேண்டும் என்று சொல்லி யிருக்க, தமிழைக்கூட நன்கு கற்றறியாத சிலர் 'ஹிந்தி ஒழிக!' என்று கூச்சல் போடுகிருர்கள். இதைப் போல் அறியாமை — முழு மூடத்தனம்— வேறு என்ன இருக்க முடியும்?'' என்று காரசாரமாக வெளுத்துக் கட்டினர்.

''கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்;
சிங்கமராட்டியர்தம் கவிதைகொண்டு
சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம்''

காசிநகர்ப் புலவர் பேசும் உரை தான்
காஞ்சியில் கேட்பதற்கோர் கருவிசெய்வோம்''

என்னும் பாடல் வரிகளை கனம் பக்தவத்ஸலம் எடுத்துச் சொல்லி, பாரதியாரின் விரிந்த மனேபாவத்தையும், ஹிந்தி ஒழிப்பாளரின் குறுகிய நோக்கத்தையும் ஒப்பிட்டுக் காட்டினர். எல்லாரும் ஸ்ரீ பக்தவத்ஸலம் சுருக்கமாகப் பேசுவார் என்று எதிர் பார்த்ததற்கு மாருக முக்கால் மணி நேரம் சக்கைப் போடு போட்டார்.

இந்த வருஷத்துப் பாரதி விழாவில் எல்லாரையும் திகைத்துத் திக்கு முக்காடப் பண்ணிய பிரசங்கம் மந்திரி மாதவமேனன் செய்த பிரசங்கந்தான். அவருடைய பாவம் நிறைந்த மலையாளத் தமிழ் அடிக்கடி நகைச் சுவையை யூட்டிச் சபையோரைச் சிரிக்கப் பண்ணிய போதிலும், கருத்துகள் மிக உயர்வாயிருந்தன. உதாரணமாக அவர் தேசியக் கொடியைப் பற்றிக் கூறியதைக் குறிப்பிடலாம். ''ஹிந்தியில் 'ஜண்டா ஊஞ்சா ரஹே ஹமாரா' என்ற பாட்டு இருக்கிறது. 'நம்முடைய கொடி உயரப் பறக்கட்டும்' என்று அர்த்தம். இவ்விதம் சிலர் 'மூவர்ணக் கொடி' என்றும், சிலர் 'சுதந்திரக் கொடி' என்றும், 'தேசியக் கொடி' என்றும் 'பாரதக் கொடி' என்று பாடியும் சொல்லியு மிருக்கிருர்கள். ஆனல் பாரதியாரோ 'தாயின் மணிக் கொடி' என்று சொன்னர். மற்றவர்களின் வாக்குக்கும் மகாகவியின் வாக்குக்கும் இதுதான் வித்தியாசம்'' என்று சொன்ன போது சபையில் இருந்த ஐயாயி

ரம் ஜனங்களும் ஐம்பதினாயிரம் பேரின் கர கோஷ சத்தத்தை உண்டாக்கினார்கள்.

“ உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை
செய்வோம்—வீணில்
உண்டு களித்திருப்போரை நிந்தனை
செய்வோம் ”

என்ற வரிகளுக்குக் கனம் மாதவமேனன் அபிநயம் பிடித்ததைப் பார்த்துச் சபையோர் இடைவிடாமல் ஐந்து நிமிஷ நேரம் சிரித்து வயிறு புண்ணானார்கள்.

ஸ்ரீமதி குட்டியம்மாளு எம். எல். ஏ. அவர்களும் ஒரு கச்சிதமான அழகிய பிரசங்கம் செய்து விட்டுப் பாரதி பாட்டுப் போட்டியில் வெற்றி பெற்ற எட்டயபுரம் மாணாக்கர்களுக்கு அன்ன மூட்டிய தெய்வ மணிக் கையினால் புத்தகப் பரிசுகள் வழங்கினார்.

பின்னர், ஸ்ரீ. கே. பாலசுப்பிரமண்ய ஐயர், ஸ்ரீ எம். சி. வீரபாகுப் பிள்ளை, ஸ்ரீ ப. ரா. ஆகியவர்கள் பாரதியாரைப் பற்றியும், அவருடைய பாடல்களைப் பற்றியும் பேசினார்கள். இவ்வளவு பேர்கள் பேசியதிலும் சாராம்சத்தை எடுத்துக் காட்டிப் பேசிய ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் விழாவுக்கு முத்தாய்ப்பு வைத்தார். வந்தனோபசாரங்களுடன் அன்று நிகழ்ச்சி முடிந்தது.

சங்கீத வித்வான் ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதி ஆரம்பத்திலும், இடையிலும் முடிவிலும் பாரதி பாடல்களைப் பக்க வாத்தியத் தொல்லைகள் இல்லாமல் மிக அருமையாகப் பாடினார். அவர் பாடியவற்றுக்குள்ளே “பகைவனுக் கருள்வாய்” என்ற பாடல் சிகரமாக விளங்கியது.

பாரதியாரின் தாய் மாமன் ஸ்ரீ சாம்பசிவய்யர் பாரதியாருடைய பாணியில் சில பாடல்களைப் பாடிக் காட்டினார்.

**ம**று நாள் காலையில் எட்டு மணிக்கு மறுபடியும் விழா ஆரம்பமாகிப் பத்து மணி வரையில் நடந்தது.

பாரதியாருடன் நெருங்கிப் பழகியவரான ஸ்ரீ ஹரிஹர சர்மா பாரதியாரைப் பற்றித் தாம் நேரில் கண்ட விஷயங்களை ரஸமாகச் சொன்னார். ஸ்ரீமதி ஆர். வி. சாஸ்திரி, பாரதியார் பாடல்களில் சில வரிகளை இனிமையாகப் பாடி[illegible] சுவையுடன் பேசினார்.

திருப்புகழ்மணி ஸ்ரீ டி. [illegible] சாமி ஐயர் சுமார் ஒருமணி[illegible] சங்கீத உபந்நியாசம் சபை[illegible] மறக்கச் செய்து பரவசத்தில[illegible] பெரும்பாலும் பாரதியாரின்[illegible] பாடல்களிலிருந்து திருப்புகழ்[illegible]துப் பாடி, நமது பெரியோர்க[illegible] வாக்குகளிலிருந்து ஒப்பான பாட[illegible] குறிப்பிட்டு, “பாரதியார் சாதார[illegible] யல்லாதி, புரட்சி வீரர், தேசபக்[illegible] பது மட்டுமல்ல. அவர் ஒரு சித்த பு[illegible] என்று நிரூபித்தார். பாரதியாரின் ‘[illegible] ன்னும் பாடலைத் திருப்புகழ்மணி பா[illegible] மிக உயர்வா யிருந்தது. மொத்தத்[illegible] இந்த வருஷத்துப் பாரதி விழாவுக்[illegible] திருப்புகழ் மணியின் சங்கீத உபந்நியாசம்[illegible] சிகரமாக அமைந்தது.

* * *

இந்த வருஷம் பாரதி விழாவுக்கு வந்திருந்த தலைவர்களுக்கும் பிறருக்கும் ஸ்ரீ மாரியப்ப நாடார் பாடசாலையிலும், அவருடைய தொடர் வீடுகளிலும் ஜாகை வசதி ஏற்படுத்தப்பட்டிருந்தது. தமது இல்லங்களில் தங்கியவர்களுக்கு ஸ்ரீ மாரியப்ப நாடார் செய்து கொடுத்த சௌகரியங்களையும் செய்த உபசாரங்களையும் சொல்லிமுடியாது.

விழா சம்பந்தமான ஏற்பாடுகளைப் பாரதி மன்ற நிர்வாகிகள் திறமையாகச் செய்தது ஒருபுறமிருக்க, ஸ்ரீ டி. பி. சுப்பையா அவர்களின் தொண்டை விசேஷமாகப் பாராட்ட வேண்டும். நின்ற இடத்தில் நிற்காமல் பம்பரம் போல் சுற்றி அவர் சகல காரியங்களையும் செய்தார்.

எட்டயபுரம் சப் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ எஸ். சுப்பிரமணியப் பிள்ளை செய்திருந்த பந்தோபஸ்து ஏற்பாடுகளையும் பொதுவாக அதிகாரிகளின் ஒத்துழைப்பையும் குறிப்பிடுவது அவசியம்.

* * *

இந்த வருஷத்து விழாவில் மிக முக்கியமான சம்பவம் பாரதியார் சங்க ஸ்தாபனத்துக்கு அடிகோலியதாகும். பாரதி மண்டப நிர்வாகப் பொறுப்பையும், வருஷந்தோறும் பாரதி விழா நடத்தும் பொறுப்பையும் இச் சங்கத்தார் ஏற்று நடத்துவார்கள். சங்கத்தைப் பற்றிய மற்ற விவரங்கள் அடுத்த “கல்கி” இதழில் வெளியாகும்.

"காளிகோடி"

மாஜூர், செப், 15உ

நமஸ்காரம்.

எனது நண்பரும், மாஜூர் காளிகோயில் டிரஸ்டியுமான திருநிறைச் செல்வன் **சோமுவுக்கும்** திருநிறைச் செல்வி **பாப்பாவுக்கும்** செப்டம்பர் மாதம் 5-ம் தேதி மாஜூரில் நடந்த திருமணத்தின் போது வந்திருந்த ஆயிரக்கணக்கான நண்பர்களுக்கும், பிரமுகர்களுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும், வாழ்த்துக்களும் பரிசுகளும் வழங்கிய அன்பர்களுக்கும், கலியாணத்தைச் சிறப்பிக்க அழகிய வேலைப்பாடுடன் கொட்டாரப் பந்தல் அமைத்துக் கொடுத்த ஆலப்புழை ஸ்ரீ மணி அய்யருக்கும், மங்களத்திருநாளன்று மாலை இன்னிசை விருந்தளித்துக் கொடுத்த ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதருக்கும், அன்றிரவு நாதஸ்வர வெள்ளத்திலே மிதக்கடித்த திருவாடுதுறை ஸ்ரீ ராஜரத்னம் பிள்ளையவர்களுக்கும், தன்னுடைய பரதநாட்டியத்தின் மூலம் மண வைபவத்திற்கு வந்திருந்தவர்களை மகிழ்வித்ததுடன் அது சமயம் மாஜூர் காளி சன்னதியில் "நாட்டியக் கலாராணி"ப் பட்டத்தைப் பெற்றுக் கொண்ட குமாரி ஹேமமாலினிக்கும், ஜாதிமத பேதமின்றி பதினாயிரக் கணக்கான மக்களுக்கு அன்னமளிக்கும் உத்ஸாகமான வேலையில் ஈடுபட்டவர்களுக்கும் தனித்தனியே நன்றி கூறமுடியாததால் "கல்கி" பத்திரிகையின் மூலம் என்னுடைய அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு,

**ஆர். எஸ். சர்மா.**





• •

**பாரதியார் திருவிழா**

கோயில்பட்டி ஸ்டேஷனில் தலைவர்கள் வந்து இறங்குகிறார்கள்.

• • •

எட்டயபுரம் சேர்ந்ததும் தலைவர்களுக்கு வரவேற்பு நடைபெற்றது.

• •













பாரதி விழாப் பந்தலின் முன் முகப்புத் தோற்றம்.



பாரதி ஞாபகார்த்த மண்டபப் புத்தகாலயத்தைக் கனம் பக்தவத்ஸலம் திறந்து வைத்தார்.



ஐயாயிரம் பேருக்குமேல் கூடியிருந்த பாரதி விழாப் பந்தலின் கோலாகலமான காட்சி.






அத்தியாயம் 12

## சரித்திர நிபுணர்

"ஸ்ரீமதி தாரிணி தேவி அவர்களுக்கு: இன்று தாஜ்மகாலில் என்னால் தங்களுக்கு நேர்ந்த இன்னலைக் குறித்து வருந்துகிறேன். தங்களை நெற்றியில் காயப்படுத்தி இரத்தம் வருவிக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு அணுவளவும் இருந்ததில்லை. அத்தகைய சந்தேகம் தாங்களும் கொண்டிருக்க மாட்டீர்கள். பேசும்போது உணர்ச்சி வேகத்தினால் தூண்டப்பட்டுக் கையிலிருந்த தாஜ்மகால் பொம்மையை வீசி எறிந்தேன். அது சுக்கு நூறாயிற்று. இதைப் பற்றி நான் வருந்தவில்லை. அசல் தாஜ்மகாலும் ஏதேனும் ஒரு காரணத்தினால் இம்மாதிரி நொறுங்கிப் போயிருந்தாலும் அதற்காக நான் சிறிதும் வருத்தப்பட்டிருக்க மாட்டேன். யாரோ ஒரு மௌடீகக் கிழவனுடைய கையில் இந்தப் பெரிய தேசம் ஒரு காலத்தில் சிக்கிக் கொண்டிருந்தது. வயோதிகத்தினால் அறிவு மங்கி வந்த நாளில், அந்த அரசன் காதல் என்னும் மூடப்பிரமை காரணமாக ஒரு பெரிய பொம்மை செய்தான். செத்துப்போன தன்னுடைய காதலியின் ஆத்ம திருப்திக்காக என்றெண்ணிக் கோடி கோடி ரூபாய் செலவிட்டு அந்தப் பொம்மையைச் செய்தான். இதைத்தான் 'தாஜ்மகால்' என்னும் உலக மகா அதிசயங்களில் ஒன்று என்பதாக அறிவற்ற, சிந்தனா சக்தியில்லாத, மனித மந்தைகள் ஆச்சரியத்துடன் பார்க்கின்றன; வியந்து கொக்கரிக்கின்றன! —இது என்னுடைய உறுதியான அபிப்பிராயம்.

ஆனால் எப்போதோ இருந்து இறந்து போன ஷாஜஹான் தாஜ்மகால் கட்டியதற்கு நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்கள் பேரில் எனக்குக் கோபம் கிடையாது. கோபங் காரணமாக வேண்டுமென்று அந்தப் பொம்மைத் தாஜ்மகாலை நான் எறியவில்லை. அதன் துகள் தங்கள் நெற்றியில் பட்டுக் காயமாகும் என்றாவது, இரத்தம் வரும் என்றாவது கொஞ்சங்கூட எதிர்பார்க்கவில்லை. இப்படி எதிர்பாராமல் நேர்ந்த காரியத்திற்காக மறுபடியும் தங்கள் மன்னிப்பைக் கோருகிறேன்.

ஆனால் இந்தக் கடிதத்தை முடிப்பதற்கு முன் இன்னொரு விஷயம் சொல்லத்தான் வேண்டும். தங்களைக் காயப்படுத்த விரும்பவில்லையென்று சொன்னேனல்லவா? ஆனால் தங்களுடைய நெற்றியில் ஒரு சிறு காயம் பட்டுவிட்டதற்காக அப்படித் தங்களைச் சூழ்ந்து கொண்டு 'ஆ ஊ' என்று ஆர்ப்பாட்டம் செய்தார்களே, அவர்களையெல்லாம் தலையில் இரண்டு குட்டுக் குட்டிக் கன்னத்திலும் இரண்டு அறைவிட வேண்டுமென்று எனக்குத் தோன்றியது! என் கையில் பிரம்பு இருந்தால் தலைக்கு நாலு அடி முதுகில் கொடுத்து இழுத்து அப்பால் விட்டிருப்பேன்; சவுக்கு இருந்தாலும் அடித்திருப்பேன்.

அறிவற்ற வீர் மூடங்கள்! ஒரு சின்ன விஷயத்துக்கு எத்தனை கூச்சல்? எத்தனை குழப்பம்? எவ்வளவு ஆர்ப்பாட்டம்?

பாரததேசம் சுதந்திரம் பெறுவதற்குள்ளே இந்த நாட்டு மக்கள் எவ்

வளவோ மகத்தான கஷ்டங்களைச் சகித்தாக வேண்டும்; லட்சக் கணக்கான ஜனங்கள் உயிரைப் பலிகொடுத்தாக வேண்டும்; கண்ணைத் திறந்து கொண்டு நெருப்பிலே குதித்தாக வேண்டும். சுதந்திரமடைந்திருக்கும் வெளி நாடுகளைப் பாருங்கள்! நாட்டைப் பாதுகாப்பதற்காகப் போர் புரிந்து எத்தனை பேர் கை யிழந்தும், காலிழந்தும், கண்ணிழந்தும், அங்கஹீனர்களாக வாழ்நாள் முழுதும் காலங் கழிக்கிறார்கள்? முகமெல்லாம் பயங்கரமான காயங்களின் அடையாளங்களுடன் எத்தனை பேர் உயிர் வாழ்கிறார்கள்? இந்த நாட்டில் நாமோ ஒரு சிறு நெற்றிக் காயத்திற்காக, ஒரு துளி இரத்தம் வந்து விட்டதற்காக, இவ்வளவு தடபுடல் படுத்துகிறோம்! இப்படிப்பட்ட கோழைகளையும் பயங்கொள்ளிகளையும் 'ஹிஸ்டீரியா' நோயாளிகளையும் வைத்துக் கொண்டு இந்தப் பாரத தேசம் எப்படித்தான் சுதந்திரம் அடையப் போகிறதோ,— ஆண்டவனுக்குத்தான் தெரியும்!

இந்த வீர பூமியில் நம்முடைய முன்னோர்கள் இப்படி யெல்லாம் இருக்கவில்லை. வீர இராஜபுத்திர நாட்டுக்கு நாளை நீங்கள் போவீர்கள். அங்கே எத்தகைய வீர புருஷர்களும் வீர வனிதைகளும் ஒரு காலத்தில் வாழ்ந்தார்கள்! 'கோட்டை விழுந்து விட்டது; எதிரிகள் உள்ளே புகுந்து விட்டார்கள்!' என்று கேட்டதும், தயாராக வளர்த்து வைத்திருந்த பெருந்தீயில் நூற்றுக்கணக்கான நாரீமணிகள் விழுந்து உயிரை விட்ட நாடல்லவா இது? ராணா சங்கிராம சிங் என்று ஒரு மகாவீரன் இருந்தான். அவனுடைய தேகத்தில் போர்க்களத்திலே பெற்ற தொண்ணூற்றாறு காயங்களின் வடுக்கள் இருந்தனவாம்! முத்துக்களும் ரத்தினங்களும் சுடர் விடும் வைரங்களும் பதித்த ஆபரணங்களைக் காட்டிலும் அந்தக் காயங்களின் வடுக்களையே சிறந்த பூஷணமாக அந்த மகாவீரன் கருதினானாம். அப்படிப் பட்ட வீரர்கள் வாழ்ந்த தேசத்தில் இன்றைக்கு ஒரு சிறு காயம் நம்மையெல்லாம் நிலை கலங்கச் செய்து விடுகிறது. பெண்களை மட்டுமல்ல, புருஷர்களைக் கூட 'ஹிஸ்டீரியா'வுக்கு உள்ளாக்கி விடுகிறது! கடவுளே!

இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன். எங்கள் நாட்டுக் கவி 'நெஞ்சு பொறுக்குதில்லையே!' என்று ஒரு பாடல் பாடி யிருக்கிறார். அந்தப் பாரதியார் பாடல் சீதாவுக்குத் தெரியும்; பாடச் சொல்லிக் கேளுங்கள்.

இங்ஙனம்,
சூரியா.''

இந்தக் கடிதத்தை ஆக்ராவிலிருந்து ரஜனிபூருக்குச் சென்று கொண்டிருந்த ரயிலில் வைத்துத் தாரிணி படித்துக் கொண்டிருந்தாள். ஒரு தடவை படித்து, இரண்டாந் தடவையும் படித்து விட்டு, அந்தக் கடிதத்தைத் தன்னுடைய கைப் பெட்டிக்குள் வைத்துப் பூட்டினாள்.

இதைப் பார்த்த ராகவன், "கடிதத்தை இவ்வளவு பத்திரமாய் வைத்துப் பூட்டுகிறீர்களே? அது என்ன காதல் கடிதமா?" என்று கேட்டான்.

"பிதற்றல்!" என்றாள் தாரிணி. ராகவனுடைய கேள்வியைப் பற்றி மேல்கண்ட அபிப்பிராயத்தை அவள் தெரிவித்தாள். ஆனால் ராகவன் அதைத்தெரிந்து கொள்ளாதது போல, "பிதற்றலைப் பெட்டியில் வைத்துப் பூட்டுவானேன்!" என்றான்.

* * *

அன்று காலையில் தாரிணியும் அவள் தோழியும் வந்து ரயில் ஏறிய போது ஏற்கெனவே வண்டியில் ராகவனும் சீதாவும் மட்டும் ஏறியிருப்பதைக் கவனித்தார்கள். தாரிணியின் மனதில் ஒரு சந்தேகம் உதித்தது. "சூரியா எங்கே?" என்றாள்.

"அவன் வரவில்லை. டில்லிக்குப் புறப்பட்டுப் போய் விட்டான்!" என்றான் ராகவன்.

"நேற்றிரவு சம்பவத்துக்காக அவரைச் சண்டை பிடித்துத் துரத்தி விட்டீர்களா, என்ன?" என்று தாரிணி கேட்டாள்.

"நாங்கள் ஒன்றும் சண்டை பிடிக்கவில்லை; அவனுக்கே அவமானமாயிருந்தது போலிருக்கிறது. பிடிவாதமாய்ப் புறப்பட்டுப் போய்விட்டான்!" என்றான் ராகவன்.

சீதா தன்னுடைய அம்மாஞ்சியின் கௌரவத்தைப் பாதுகாக்க வேண்டி, "அவனுக்கு ஏதோ அவசர ஜோலி

யாம். ஆக்ராவுக்கு மட்டும் வருவதாகத்தான் முன்னேயே சொல்லியிருந்தான். உங்களுக்கு ஒரு மன்னிப்புக் கடிதம் கூடக் கொடுத்திருக்கிறான்!" என்று கூறினள். பிறகு தன் கணவனைப் பார்த்து, "கடிதத்தை அவரிடம் கொடுங்களேன்?" என்றாள்.

"வண்டி புறப்படட்டும்; இப்போது என்ன அவசரம் அந்தக் கடிதத்திற்கு?" என்றான் ராகவன்.

தாரிணி, "மன்னிப்பாவது, கடிதமாவது? ஒரு சின்ன விஷயத்துக்காக நீங்கள் எல்லாருமாகச் சேர்ந்து அவரைச் சண்டை பிடித்துத் துரத்தி விட்டீர்கள். எனக்கு ரொம்ப வருத்தமாயிருக்கிறது!" என்றாள்.

இது சீதாவுக்குத் திருப்தியாயிருந்தது. ஆனால் ராகவன் கோபமாக, "சின்ன விஷயமா அது? நெற்றியில் பட்டதுபோல் கண்ணில் பட்டிருந்தால் என்ன ஆகியிருக்கும்? இருந்தாலும், மனிதராய்ப் பிறந்தவர்கள் இவ்வளவு மிருகத்தனமாக நடந்து கொள்ளக் கூடாது!" என்றான்.

அவனுடைய அபிப்பிராயத்தை நிருபமா ஆதரித்து, "ஆமாம்; அந்தப் பையன் சுத்தப் பட்டிக்காடாகத்தான் நடந்து கொண்டான்!" என்றாள்.

"பட்டணங்களில் உள்ளவர்கள் எல்லாம் ரொம்ப நாகரிகமாக நடந்து கொள்வதாக உங்களுடைய எண்ணம் போலிருக்கிறது! பட்டணங்களில் வசிப்பவர்கள் எப்படிச் சில சமயம் புலி கரடிகளாகவும் பேய் பிசாசுகளாகவும் மாறுகிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியாது!" என்றாள் தாரிணி.

வண்டி புறப்பட்டுச் சற்று நேரத்துக்கெல்லாம் "அந்தக் கடிதம் எங்கே?" என்று தாரிணி கேட்டாள்.

"ஏது? ஏது? அதைப் பார்க்காவிட்டால் உங்களுக்கு மன நிம்மதி ஏற்படாது போலிருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே ராகவன் கடிதத்தை எடுத்துக் கொடுத்தான்.

* * *

"அது என்ன காதல் கடிதமா?" என்று ராகவன் கேலியாகப் பேசிய போது, அவர்கள் எல்லாருக்கும் கடிதத்தை முழுதும் படித்துக் காட்டி விடவேண்டும் என்று தாரிணிக்குத் தோன்றியது. மறுகணமே அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டாள். அந்தக் கடிதத்தில் அடங்கியுள்ள விஷயங்களை இவர்கள் புரிந்து கொள்ளவே மாட்டார்கள். மேலும் ஏதாவது பரிகாசமாகப் பேசுவார்கள். இவ்விதம் எண்ணிச் சீதாவைப் பார்த்து, "நீங்கள் மறுபடியும் உங்கள் அம்மாஞ்சியைப் பார்க்கும் போது, 'இவ்வளவு நீளமான மன்னிப்புக் கடிதத்துக்கு அவசியமே இல்லை' என்றும், 'என்னுடைய நெற்றிக் காயத்தை நான் பொருட் படுத்தவேயில்லை' என்றும் நான் சொன்னதாக அவரிடம் தெரியப் படுத்துங்கள்!" என்று சொன்னாள்.

ஆயிரம் ஆண்டுகளாக வீர புருஷர்களின் இரத்தமும் வீர மாதரசிகளின் கண்ணீரும் சிந்திப் புனிதமான இராஜபுத்ர நாட்டுக்குள் அவர்கள் ஏறியிருந்த ரயில் வண்டி பிரவேசித்தது. கண்ணுக் கெட்டிய தூரம் வறண்ட பூமி; அல்லது மொட்டைப் பாறைகள். ஆங்காங்கே இடிந்த கோட்டைச் சுவர்கள்; சிதைந்த மண்டபங்கள்; பாழடைந்த மசூதிகள்; பசுமை என்பதையே பார்க்க முடியவில்லை. வானளாவிய விருட்சங்கள் இல்லை; அடர்த்தியான காடுகள் இல்லை; பச்சைக் கம்பளம் விரித்தாற் போன்ற நெல் வயல்கள் இல்லை; பொன்னிறங் கொண்ட கோதுமைப் பயிர்களும் இல்லை. சிற்சில இடங்களில் தாழைக மண்டிய முள் புதர்கள் மட்டும் காணப்பட்டன.

"நாம் போகிற வழி நெடுகிலும் இப்படித்தான் இருக்குமா?" என்று சீதா கேட்டாள்.

"இல்லை; ரஜனிபூர் சேர்ந்து விட்டால் வேறு விதமாயிருக்கும். ஆனால் அங்கே போய்ச் சேருகிற வரையில் இந்த இலட்சணந்தான். 'சுதந்திரம், சுதந்திரம்' என்று அடித்துக் கொள்கிறார்களே! இராஜபுத்திர வீரர்கள் அந்த நாளில் சுதந்திரத்துக்காகப் போரிட்டதன் பலன்தான் இது! இராஜஸ்தானத்தில் பெரும் பகுதி பாலைவனமாகப் போய் விட்டது!" என்று ராகவன் சொன்னான்.

"இராஜபுத்திரர்கள் சுதந்திரத்துக்காகப் போரிட்டதனால் இராஜஸ்தா

னம் பாலைவன மாகவில்லை. ஒருவருக்கொருவர் சகோதரச் சண்டையிட்டதினால்தான் இப்படியாயிற்று. அண்ணன் சுதந்திரத்துக்காகச் சண்டை போட்டால் தம்பி எதிராளியோடு சேர்ந்து கொண்டான். எத்தனை ராஜபுத்திரர்கள் மொகலாயர்களுக்கு அடிமையாகி ஏவல் செய்து வாழ்ந்தார்கள்? இந்தியா தேசம் நாசம் அடைந்தது சகோதரச் சண்டையினால்தான். இதில் வேடிக்கை என்னவென்றால், இதையெல்லாம் சரித்திரத்தில் படித்திருந்தும் நமக்குப் புத்தி வந்தபாடில்லை. இன்னமும் சகோதரச் சண்டைகள் போட்டுக் கொண்டுதானிருக்கிறோம்" என்றாள் தாரிணி.

"அம்மணி! நீங்கள் என்ன பெரிய சரித்திர நிபுணரைப்போல் பேசுகிறீர்களே!" என்று ராகவன் பரிகாசக் குரலில் கேட்டான்.

"என்ன சொன்னீர்கள்?" என்று சொல்லிவிட்டு நிருபமா இடியிடி என்று சிரித்தாள்.

அவளுடைய சிரிப்பின் காரணம் விளங்காமல் ராகவன் திகைத்தான்.

"எதற்காகச் சிரிக்கிறீர்கள்? திடீரென்று ஏதாவது......" என்றான்.

"என்ன சொன்னீர்கள்? பெரிய சரித்திர நிபுணரைப்போல் என்றா? 'போல்' என்று சொன்னதற்காகத்தான் சிரித்தேன்" என்றாள் நிருபமா.

"அப்படிப் 'போல்' என்ற வார்த்தையில் நகைச்சுவை என்ன இருக்கிறது, எனக்கு விளங்கவில்லையே?"

"உங்களுக்கு விஷயம் தெரியாதென்று இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. தாரிணியைப் பழைய தேச சேவிகை தாரிணி என்றே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறது. பீஹார் பூகம்பத்துக்குப் பிறகு அவள் காலேஜில் சேர்ந்து படித்துப் பட்டம் பெற்று இப்போது யுனிவர்ஸிடி உதவிச் சம்பளம் பெற்றுச் சரித்திர ஆராய்ச்சி செய்து வருகிறாள். இது உங்களுக்குத் தெரியுமென்று எண்ணியிருந்தேன். பின்னே எதற்காக என்னையும் இழுத்துக்கொண்டு ஊர் ஊராக அலைகிறாள் என்று நினைத்தீர்கள்? தற்போது இராஜஸ்தானத்துச் சரித்திரத்தில் விசேஷ ஆராய்ச்சி நடைபெறுகிறது!"

நிருபமா இவ்விதம் சொன்னதும் ராகவனுடைய உள்ளம் ஒரே ஒரு நிமிஷத்தில் என்ன வெல்லாமோ கற்பனை செய்யத் தொடங்கியது. ஆச்சரியத்தில் மூழ்கிப் போனான். ஆஹா! படிப்பின் மேல் உள்ள ஆசையினால் அல்லவா இவள் கலியாணத்தை வெறுத்திருக்கிறாள்? இந்த உண்மையை நம்மிடம் முன்னமேயே தெரிவித்திருக்கக் கூடாதா? தெரிவித்திருந்தால் இவளுடைய படிப்புக்கு நாம் குறுக்கே நின்றிருப்போமா? படிப்பு முடியும் வரையில் காத்திருக்கலாமே? என்ன பிசகு செய்து விட்டாள்! — என்று அவன் மனம் எண்ணமிட்டது.

**தா**ரிணி பி. ஏ. பட்டம் பெற்றுச் சரித்திர ஆராய்ச்சி செய்து வருகிறாள் என்னும் செய்தியைச் சொல்லி விட்டு நிருபமா படுத்துத் தூங்கிப் போனாள். தாரிணியிடம் அவளுடைய காலேஜ் வாழ்க்கையைப் பற்றி ராகவன் பல கேள்விகள் கேட்டான். அவளோ பராமுகத்துடன் ஏனோ தானோ வென்று பதில் சொல்லி வந்தாள். சற்று நேரத்துக் கெல்லாம் ராகவனும் தூங்கிவிட்டான்.

பிறகு தாரிணி சீதாவின் அருகில் நெருங்கி உட்கார்ந்து கொண்டு, "உங்கள் அம்மாஞ்சி சூரியாவைப் பற்றிச் சொல்லுங்கள். அவர் எப்போதுமே இப்படித்தான் படபடப்பாயிருப்பாரா?" என்று கேட்டாள்.

முந்தைய சம்பாஷணையின் போதெல்லாம் சீதாவுக்கு நிமிஷத்துக்கு நிமிஷம் கோபம் வளர்ந்து வந்தது. முதல் நாள் தாரிணியைச் சந்தித்தது முதல் நிருபமா — ராகவன் — தாரிணி சம்பாஷணையைக் கேட்டதிலிருந்தும் தன்னுடைய சொந்த ஊகத்தினாலும் அவள் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டிருந்தாள். ராகவனும் தாரிணியும் பழைய சிநேகிதர்கள் என்பது நிச்சயம். பத்மாபுரத்தில் அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் பேசிய வம்புப் பேச்சுகளில் ஏதோ உண்மை இருக்கத்தான் வேண்டும். ராகவனுக்குத் தாரிணியின் மேல் இன்னும் அபிமானம் இருந்தது என்பதும் ஸ்பஷ்டமாய்த் தெரிந்தது. தான் இருக்கும் போது இதையெல்லாம் அவர்கள் காட்டிக் கொள்வதை நினைத்து நெஞ்

சம் கொதித்தது. சீச்சீ! என்ன வெட்கங்கெட்ட ஸ்திரீ இவள்! நம்மை எதற்காக இப்படித் தொடர்ந்து வருகிறாள்? வேறு எங்கேயாவது போய்த் தொலைவதுதானே? சூரியாவும் நிருபமாவின் கணவனும் இந்த கோஷ்டியில் சேர்ந்து கூட்டமாக இருந்தபோது ஒருமாதிரி கலகலப்பாக இருந்தது. இப்போது அவர்களும் இல்லை; அதனால் கலகலப்பும் இல்லை. இந்த மாதிரி நேரும் என்று தெரிந்திருந்தால், இந்தப் பிரயாணத்துக்கு வரவில்லை யென்றே சொல்லியிருக்கலாம். இப்பொழுதுதான் என்ன? 'அவள் வந்தால் நான் வரவில்லை. அவளையே அழைத்துக் கொண்டு போங்கள். நான் டில்லிக்குத் திரும்பிப் போகிறேன்!' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட வேண்டியதுதான்......... இவ்விதம் எண்ணி எண்ணிப் பல முறை பேசுவதற்குச் சீதாவின் உதடுகள் துடித்தன. ஆனால் வாயிலிருந்து வார்த்தைகள் வரவில்லை. அப்படிச் சொன்னால் அதன் பலன் என்ன ஆகுமோ வென்று உள்ளத்தின் ஒரு பகுதி அஞ்சியது.

இத்தகைய மனோ நிலையில் சீதா இருந்தபோது தாரிணி அவளிடம் நெருங்கி உட்கார்ந்து "சூரியாவைப் பற்றிச் சொல்லுங்கள்!" என்றதும், சீதாவுக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்தது. "சூரியாவைப் பற்றி இப்போது என்ன விசாரணை வேண்டிக் கிடக்கிறது? என்னைப் போல் அவனும் ஓர் அசடு; அநாதை!" என்றாள்.

"சகோதரி! ஏன் இவ்வளவு வெறுப்பாகப் பேசுகிறாய்? என் நெற்றியில் காயப்படுத்தி விட்டதற்காகச் சூரியா ரொம்பவும் மனம் நொந்து எழுதி யிருக்கிறார். உத்தம குணம் படைத்தவர், ஆனால் கொஞ்சம் படபடப்புக்காரர் என்று தோன்றுகிறது. காயம் சரியாய்ப் போய் விட்டது. என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று உன்னிடம் சொல்லியனுப்ப விரும்பினேன். உனக்கு அவரைப் பற்றிப் பேச இஷ்டமில்லை யென்றால், வேண்டாம்!" என்றாள் தாரிணி.

இதைக் கேட்டதும் சீதாவின் மனம் அடியோடு மாறிப் போய் விட்டது. "இல்லை, இல்லை. எனக்கு வெறுப்பு ஒன்றுமே இல்லை. சூரியா மிகவும் உத்தமமான பிள்ளைதான்; அவ்வளவு ஒன்றும் படபடப்பாக அவன் பேசுவதும் கிடையாது. குடும்பத்திலேயே சூரியாதான் நிதானத்துக்கும் பொறுமைக்கும் பெயர் போனவன். நேற்று அவன் படபடப்பாகப் பேசியதும் தாஜ்மகால் பொம்மையை வீசி எறிந்து உடைத்ததும் எனக்கே ஆச்சரியமாயிருந்தது. பாவம்! அவனுக்கு என்ன மனக் கஷ்டமோ? மொத்தத்தில் அதிர்ஷ்டக் கட்டை; இல்லாவிட்டால் இப்படி வந்து நின்றாடுவானேன்? படித்துப் பாஸ் செய்து எவ்வளவோ நல்ல நிலைமைக்கு வந்திருக்கலாம்!" என்றாள்.

"அதிர்ஷ்டக் கட்டை என்று எதனால் சொல்கிறாய்?" என்று தாரிணி கேட்க, சீதா கொஞ்சங் கொஞ்சமாகச் சூரியாவின் கதையை யெல்லாம் சொன்னாள். அவனுடைய தகப்பனார், தமையன், அம்மா, தங்கை ஆகியவர்களைப் பற்றிச் சொன்னாள். தமையனோடும் ஊராரோடும் அவனுக்கு நேர்ந்த தகராறுகளைப் பற்றியும் விரிவாகச் சொன்னாள். ஆனால் தன்னுடைய பிறப்பு, வளர்ப்பு, கலியாணம்—இதை யெல்லாம் பற்றி மட்டும் ஒரு விஷயமும் சொல்லவில்லை.

## அத்தியாயம் 13

## ரஜனிபூர்

*ரஜனிபூர் சமஸ்தானத்தின் திவான் ஸர் கே. கே. ஆதிவராகாச்சாரியாருக்குப் புத்திக் கூர்மை யுள்ள வாலிபர்களிடம் பொதுவாக அபிமானம் உண்டு. சௌந்தரராகவன் இங்கிலாந்துக்குப் பிரயாணம் செய்தபோது கப்பலில் அவரைச் சந்தித்துப் பழக்கம் செய்து கொண்டான். ராகவனுடைய புத்திக் கூர்மையும் சாதுர்யமான சம்பாஷணையும் திவான் ஆதிவராகாச்

சாரியாரின் மனதைப் பெரிதும் கவர்ந்தது. அதோடு புது டில்லி செக்ரட்டேரியட்டில் உத்தியோகம் பார்ப்பவர்களில் எத்தனை பேரைத் தெரிந்திருக்கிறதோ அவ்வளவுக்குப் புருஷார்த்தம் கைகூடுவது எளிதாகும் என்ற நம்பிக்கையும் ஸர் ஆதிவராகாச்சாரியாருக்கு இருந்தது. அவருக்குச் சந்தான பாக்கியத்தைப் பகவான் பரிபூரணமாக அளித்திருந்தார். பெரிய உத்தியோக பதவிகளை வகிக்கத் தகுந்தவர்களாக அவருக்குப் புதல்வர்களும் மாப்பிள்ளைகளும் பலர் இருந்தார்கள்.

இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்ததும் ரஜனிபூருக்கு ஒரு தடவை வர வேண்டும் என்றும், வரும்போது மனைவியையும் அழைத்து வரவேண்டும் என்றும் ஆதிவராகாச்சாரியார் சௌந்தரராகவனிடம் சொல்லியிருந்தார். அந்த அழைப்புக்கு இணங்க இப்போது சௌந்தரராகவன் சீதாவுடன் திவான் மாளிகைக்குச் சென்றான். தாரிணியும் அவளுடைய தோழியும் வேறு ஜாகைக்குச் சென்றார்கள்.

துரதிர்ஷ்டவசமாக அச்சமயத்தில் திவான் ஆதிவராகாச்சாரியார் முக்கியமான ராஜாங்கக் காரியமாக வெளியூருக்குப் போயிருந்தார். எனினும் ராகவனுடைய தந்தியைப் பார்த்துவிட்டு, அவனையும் அவனுடைய மனைவியையும் கவனித்துக் கொள்ளும்படியாகத் தம்முடைய புதல்விகளிடம் சொல்லி விட்டுப் போயிருந்தார். அவர்கள் அவ்விதமே ராகவனையும் சீதாவையும் வரவேற்றார்கள்.

ஆதிவராகாச்சாரியின் புதல்விகளான பாமா, காமா இருவரும் இங்கிலாந்து சென்று திரும்பியவர்கள். ஆங்கில நாகரிகத்தில் மூழ்கியவர்கள். ஒருத்தி ஒல்லியாயும் உயரமாயும் இருந்தாள். இன்னொருத்தி குட்டையாயும் பருமனாயுமிருந்தாள். இரண்டு பேரும் தலை மயிரை 'பாப்' செய்து கொண்டிருந்தார்கள். இருவரும் உதட்டில் சிவப்புப் பசை தடவிக் கொண்டுதான் வெளியில் புறப்படுவார்கள். எப்போதும் இங்கிலீஷில்தான் பேசுவார்கள். அதுவும், ஆங்கில நாவலாசிரியர் வோட்ஹவுஸின் கதாபாத்திரங்கள் பேசுகிற இங்கிலீஷ் நடையைக் கையாண்டு பேசுவார்கள். பியானோ வாத்தியத்தில் இங்கிலீஷ் சங்கீதம் வாசிக்கவும், 'பால் ரூம் டான்ஸ்' ஆடவும் கற்றுக்கொண்டு திறமையும் பெற்றிருந்தார்கள்.

அப்படிப்பட்டவர்களிடையே அகப்பட்டுக் கொண்டு சீதா ரொம்பவும் விழித்தாள். அவர்கள் சீதாவிடம் முதலில் இங்கிலீஷில் ஏதாவது கேட்பார்கள். சீதா ஒன்றும் புரியாமல் திகைப்பதைக் கண்டு தட்டுத் தடுமாறித் தமிழில் அதையே சொல்வார்கள். அவர்கள் இங்கிலீஷ்காரிகளைப்போல் ஆங்கில வார்த்தைகளை உச்சரித்துப் பேசியபடியால் சீதாவுக்குத் தெரிந்திருந்த கொஞ்ச நஞ்சம் இங்கிலீஷும் அங்கே பயன்படவில்லை. ஆகையால் குளத்துத் தண்ணீரிலிருந்து எடுத்துக் கொதிக்கின்ற சட்டுவத்தில் போடப்பட்ட மீனைப்போல் சீதா அவர்களிடம் அகப்பட்டுக்கொண்டு தவித்தாள்.

சீதாவுடன் பழகினதைக் காட்டிலும் ராகவனுடன் அவர்கள் சரளமாகப் பேசிப் பழகினார்கள். ராகவனும் அவர்களுடன் உற்சாகமாகப் பேசினான். அவன் அப்போது விசிய நகைச்சுவைத் துணுக்குகளையும் ஹாஸ்ய சிலேடைகளையும் கேட்டு அவர்கள் இடி இடி என்று சிரித்தார்கள். இதெல்லாம் சீதாவுக்கு ஓரளவு அருவருப்பாயிருந்தாலும் அவளுக்குக் கோபமோ ஆத்திரமோ ஏற்படவில்லை. அந்தப் பெண்கள் இருவரும் அவ்வளவு அழகாயில்லை என்பதுதான் இதற்குக் காரணமோ, அல்லது அவர்கள் விஷயத்தில் ராகவனுக்குக் கொஞ்சமும் மதிப்புக் கிடையாது என்பது சீதாவின் உள் மனதுக்குத் தெரிந்திருந்ததுதான் காரணமோ, நாம் சொல்ல முடியாது.

இடையிடையே சந்தர்ப்பம் கிடைத்த போதெல்லாம் ராகவன் சீதாவிடம் தனியாக அந்தப் பெண்களின் அவலட்சணத்தைப் பற்றியும் குரங்குச் சேஷ்டைகளைப் பற்றியும் சொல்லி வந்தான். "ஆனாலும் இவர்களிடம் நீ கற்றுக் கொள்ள வேண்டியது நிரம்ப இருக்கிறது. புது டில்லியில் சமூக வாழ்க்கை நடத்துவதற்குச் சில சில நடை உடை பாவனைகள் அவசியம்!" என்று ஒரு தடவை ராகவன் சொன்னான்.

" இவர்களிடம் நான் என்ன கற்றுக் கொள்ள வேண்டுமாம்? உதட்டில் சிவப்புப் பசை தடவிக் கொள்ளவா?" என்று சொல்லிவிட்டுச் சீதா சிரித்தாள்.

" ஆமாம்; அதுகூடத்தான் கற்றுக் கொள்ள வேண்டும். 'லிப்-ஸ்டிக்' உபயோகிப்பதில் பிசகு என்ன இருக்கிறது? நம்முடைய நாட்டில் நாம் வெற்றிலை போட்டுக் கொள்ள வில்லையா? அதனால் உதடு சிவப்பதில்லையா? கதாநாயகிகளின் உதடுகளைப் பவழத்துக்கும் கோவைப் பழத்துக்கும் மாதுளை மொட்டுக்கும் ஒப்பிட்டுக் கவிகள் வர்ணித்தால் மட்டும் 'ஆஹா' என்று பிரமாதப் படுத்துகிறோமே?" என்றான் ராகவன்.

"அதெல்லாம் இயற்கையாக இருக்க வேண்டும்" என்றாள் சீதா.

" இயற்கையாவது, மண்ணாங்கட்டியாவது? இயற்கையாக இருந்தால் ஆப்பிரிக்க தேசத்துக் காட்டு மிராண்டிகளைப் போல் இருக்க வேண்டியது தான். வகிடு எடுத்துத் தலைவாரிக் கொள்வதும், நெற்றியில் பொட்டு இட்டுக் கொள்வதும், கண்ணுக்கு மை தீட்டிக் கொள்வதும், கைக்கு மருதாணி இட்டுக் கொள்வதும் இயற்கையா? காதிலும் மூக்கிலும் தொளைபிட்டு நகைபோட்டுக் கொள்வதுதான் இயற்கையா? எல்லாவித அழகும் அலங்காரமும் செயற்கையில் சேர்ந்ததுதான்!" என்று ராகவன் அடித்துப் பேசிய போது, சீதாவினால் அதற்குப் பதில் ஒன்றும் சொல்ல முடியவில்லை. ஏதாவது சொல்ல வேண்டுமே என்பதற்காக, "அலங்காரத்துக்கும் ஒரு அளவு வேண்டும். தாரிணியைப் பாருங்கள்; அவளும் இங்கிலீஷ் படித்துப் பட்டம் பெற்றவள்தானே? அவள் 'லிப்-ஸ்டிக்' தடவிக் கொள்கிறாளா?" என்று சொல்லி வைத்தாள்.

" சில பேருக்குப் பிறவியிலேயே அழகு உண்டு; அவர்கள் ஒரு அலங்காரமும் செய்துகொள்ளா விட்டாலும் நன்றாயிருப்பார்கள். அந்த மாதிரி எல்லாரும் இருக்க முடியுமா? புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக் கொண்டது போலாகும்!" என்று சொன்னான் சௌந்தரராகவன்.

சீதாவுக்குத் தாரிணியின் பேச்சை ஏன் எடுத்தோம் என்று இருந்தது.

* * *

இந்தியாவில் உள்ள சுதேச சமஸ்தானங்களின் தலைநகரங்களுக்குள்ளே ரஜனிபூர் மிக அழகான ஒரு பட்டணம். மறுநாள் முழுதும் ராகவனும் சீதாவும் அந்தப் பட்டணத்தைச் சுற்றிப் பார்ப்பதில் கழித்தார்கள். ரஜனிபூர் ராஜாவின் பழைய அரண்மனை, புதிய அரண்மனை, வஸந்தோத்ஸவம் கொண்டாடும் பளிங்கு மாளிகை, நந்தவனங்கள், பிராணிக் காட்சிச் சாலைகள், பட்டணத்துக்குச் சற்றுத் தூரத்திலிருந்த பழைய கோட்டை கொத்தளங்கள் — எல்லாவற்றையும் பார்த்துக் களித்தார்கள். ஆனால், ஒரு இடத்திலாவது அதிக நேரம் அவர்கள் நிற்கவில்லை. எந்த இடத்திற்குச் சென்றாலும் ராகவன் நெருப்பில் காலை வைத்து விட்டவன்போல் அவசரப் பட்டான். ஒன்று விடாமல் எல்லாவற்றையும் பார்த்துவிட வேண்டும் என்ற ஆர்வத்தினால் சீதாவும் ராகவனுடைய அவசரத்துக்கேற்ப அங்கங்கே பார்க்க வேண்டியதைச் சட்டபட்டென்று பார்த்துவிட்டுக் கிளம்பினாள்.

திவானுடைய பங்களாவுக்குச் சாயங்காலம் திரும்பி வந்து கொண்டிருந்தபோது, "அவர்கள் இரண்டு பேரையும் இன்றைக் கெல்லாம் காணவேயில்லையே?" என்றாள் சீதா. இப்படிச் சொல்லிவிட்டு ஏன் சொன்னோம் என்று உதடுகளைக் கடித்துக் கொண்டாள்.

" அதைப் பற்றித்தான் நானும் யோசித்துக் கொண்டிருக்கிறேன். இன்றைக்கு டெலிபோன் பண்ணுவதாகச் சொன்னார்கள்; பண்ணவில்லை!" என்றான் ராகவன்.

இவ்விதம் சொல்லி இரண்டு நிமிஷத்துக்கெல்லாம் ராகவன் திவானுடைய டிரைவரிடம் "டஹரோ!" என்று கத்தினான். யாரும் தன்னை இவ்விதம் அதட்டிப் பேசி அறியாத அந்த மோட்டார் டிரைவரும் சடக்கென்று பிரேக் போட்டு வண்டியை நிறுத்தியதில் சீதாவைத் தூக்கிப் போட்டுவிட்டது. விஷயம் என்னவென்று பார்த்ததில், பக்கத்தில் ஒரு

வீட்டுக்கு அருகில் டோங்கா வண்டியிலிருந்து தாரிணியும் நிருபமாவும் இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

ராகவன் தாரிணியைப் பார்த்து, "இதென்ன நீங்கள் இப்படி ஏமாற்றி விட்டீர்கள்?" என்று கடுமையான குரலில் கேட்டான்.

"ஏமாற்றுவது என்ன? உங்களுடன் ஊர் சுற்றப் போனால் ஒன்றுமே பார்க்க முடியாது. விவகாரம் செய்வதற்குத்தான் சரியாயிருக்கும். அதனால்தான் நாங்கள் இருவரும் தனியாகப் போய் வந்தோம்" என்றாள் தாரிணி.

"நாளைக்கும் இப்படிச் செய்வதாகத்தான் உத்தேசமோ?" என்று ராகவன் கேட்டான்.

"நாளைக்கு ஏரிக்குப் போவதாயிருந்தால் நாங்களும் வருகிறோம். இங்கே வந்து எங்களை அழைத்துக் கொண்டு போகமுடியுமா?" என்றாள் தாரிணி.

"பேஷாக முடியும். ஆனால் இன்று மாதிரி ஏமாற்றி விடாதீர்கள். எனக்கு ரொம்பக் கோபம் வரும்!" என்றான் ராகவன்.

ராகவன் அன்றைக்கெல்லாம் ஏன் அவ்வளவு பரபரப்பாக இருந்தான் என்னும் விஷயம் சீதாவுக்கு இப்போது நன்கு விளங்கியது. அன்றிரவு அவள் சேர்ந்தாற்போல் அரை மணிக்கு மேல் தூங்கவில்லை. காலையில் படுக்கையை விட்டு எழுந்திருந்தபோது தலையை ஒரே கனமாய்க் கனத்தது. இரண்டு பொட்டுக்களிலும் சம்மட்டியால் அடிப்பது போல் வலித்துக் கொண்டிருந்தது. "நான் இன்றைக்கு ஏரிபார்க்க வரவில்லை. டில்லிக்கே திரும்பிப் போய்விட்டாலும் நல்லதுதான்!" என்று ராகவனிடம் சொன்னாள்.

---

எட்டயபுரத்தில் செப்டம்பர் 11ல் நடந்த பாரதியார் விழாவில் தலைவர் வ. ரா. அவர்களைக் காரில் வைத்துச் சிறப்பாக ஊர்வலம் நடத்தினார்கள். பேராசிரியரின் பக்கத்தில் இருப்பவர்கள்: தூத்துக்குடி நகரசபைத் தலைவர் ஸ்ரீ சுந்தரவடிவேல் நாடார், ஸ்ரீ ஹரிஹர சர்மா.



திருவல்லிக்கேணி

நேஷனல் (பெண்கள்) ஹைஸ்கூல்

கட்டிட நிதிக்காக



## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

உதவும் சங்கீதக் கச்சேரி

★

ஆஸ்தான வித்வான்

மைசூர் சௌடய்யா ... பிடில்

கல்பாத்தி ராமநாதன் ... மிருதங்கம்

ஆலங்குடி ராமச்சந்திரன் ... கடம்

★

21-11-48 ஞாயிறு மாலை 6 மணிக்கு

திருவல்லிக்கேணி

டாக்டர் பெஸண்டு ரஸ்தாவில்

பிரத்தியேகமாக அமைக்கப்பட்டுள்ள

பந்தலில்

டிக்கட்டுகள் :

ரூ. 250/: ரூ. 100/: ரூ. 50/: ரூ. 25/:
ரூ. 10/: & ரூ. 5/:

நீடித்த உழைப்பிற்கு
இணையற்றவை




## "போனிக்ஸ்"

மின்சார விசிறிகளே

இரண்டு வருஷங்கள் உத்தரவாதமுள்ளவை

அஜ்மீர் சர்க்கார் பரிசோதனை சாலையினாலும்
இந்திய சர்க்கார் ஸ்டோர்ஸ் இலாகாவினாலும்
அங்கீகரிக்கப்பட்டது

●

தென் சென்னைப் பிராந்தியங்களுக்கு
(சென்னை நகரம், சமஸ்தானங்கள் உள்பட)
பூரண விற்பனை உரிமையாளர்கள் :

## ஆர். எம். எஸ்.

## & கம்பெனி, லிமிடெட்

போன் : 4060 தந்தி : "AREMESCO"

16, பிராட்வே :: மதராஸ்

●

சப் டிஸ்ட்ரிபூட்டர்கள் :

மதுரை, ராமநாதபுரம்,
திருநெல்வேலி ஜில்லாக்களுக்கு :
இண்டர் நேஷனல் டிரேடிங் கம்பெனி
பாரத் மான்ஷன், மதுரை

தஞ்சாவூர் ஜில்லாவுக்கு :
ராஜு எலக்ட்ரிக் ஸ்டோர்ஸ், தஞ்சாவூர்

காரைக்கால், பாண்டிச்சேரி உள்பட
தென் ஆற்காடு ஜில்லாவுக்கு :
குட்மென் அன் கோ.,
39, டூப்ளே தெரு, பாண்டிச்சேரி

திருச்சி ஜில்லா—புதுக்கோட்டை
சமஸ்தானப் பிராந்தியங்களுக்கு :
கார்த்திகேயாஸ் லிமிடெட்
கிழக்கு மெயின் தெரு, புதுக்கோட்டை



# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி

## 46. கறுப்புச் சட்டம்

தம்பி! காந்தி மகாத்மாவினுடைய வாழ்க்கையில் மிக முக்கியமான கட்டத்துக்கு இப்போது வந்திருக்கிறோம். தென் ஆப்பிரிக்காவில் சத்தியாக்கிரஹ இயக்கம் எப்படி ஆரம்பமாயிற்று என்று பார்க்கப் போகிறோம். உலக சரித்திரத்தில் இடம் பெறவேண்டிய அந்தச் சம்பவத்துக்குப் போகுமுன், தென்னாப்பிரிக்காவின் பழைய சரித்திரத்தைக் கொஞ்சம் ஞாபகப் படுத்திக் கொள்ளலாம்.

ஆப்பிரிக்காக் கண்டம் என்று வழங்கும் பூப்பிரதேசம் மிக விஸ்தாரமானது. ஆசியாவுக்கு அடுத்தபடியானது. இந்தியாவைப் பெரிய தேசம் என்று சொல்கிறோமல்லவா? பல இந்தியாக்களை ஆப்பிரிக்காவிற்குள் வைத்து அடக்கிவிடலாம். ஆப்பிரிக்காவில் தென்னாப்பிரிக்கா என்று வழங்கும் பகுதி மட்டும் ஏறக்குறைய இந்தியா அவ்வளவு பெரிதானது.

ஆப்பிரிக்காவின் பூர்வீகக் குடிகள் நீக்ரோவர் என்னும் சாதியார். நீக்ரோ சாதியில் பல உட்பிரிவுகள் உண்டு. அவர்களில் ஸுலூக்கள் எனப்படுவோர் தென்னாப்பிரிக்காவில் வசித்தனர். ஸுலூக்களிடம் சில சிறந்த குணங்கள் உண்டு. ஆயினும் அவர்கள் கல்வியறிவும் பகுத்தறிவும் இல்லாத அநாகரிக மக்கள். மனிதனுடைய அறிவுக்கு எட்டாத கடவுள் என்னும் மகாசக்தி ஒன்று உண்டு என்பதை அவர்கள் ஒருவாறு உணர்ந்திருந்தார்கள். ஆனால் கடவுளை வணங்குவதற்கு அவர்கள் கடைப்பிடித்த முறைகள் அநாகரிகமானவை. பகுத்தறிவுக்கு ஒவ்வாதவை. வேட்டையாடிக் கொன்ற மிருகங்களின் மாமிசமே அவர்களுடைய முக்கியமான உணவு. குருட்டு நம்பிக்கைகள் அவர்களுக்கு ரொம்பவும் அதிகம். இதனால் மூர்க்க வீரம் உள்ள பலசாலிகளானாலும் பயப் பிராந்தி உடையவர்களாயிருந்தார்கள். வெள்ளைக்காரர்கள் துப்பாக்கி உபயோகித்துச் சட்டதை முதன் முதலில் பார்த்ததும் ஏதோ ஒரு மர்மமான சக்தி அவர்களிடம் இருப்பதாக எண்ணிக் கொண்டார்கள். அதன் காரணமாக வெள்ளைக்காரர்களிடம் பயப் பிராந்தி கொண்டார்கள். இந்தக் குருட்டு நம்பிக்கை அவர்களை விட்டு அகலவேயில்லை. ராட்சதனைப்போல் தேக பலமுள்ள ஸுலூ ஒரு சிறு வெள்ளைக்காரக் குழந்தையைக் கண்டு பயந்து நடுங்குவான்.

போர்ச்சுகல் தேசத்தைச் சேர்ந்த வாஸ்கோடி காமா என்பவன் இந்தியாவைத் தேடிக் கொண்டு கப்பலில் வந்தபோது கேப் ஆப் குட்ஹோப் என்று வழங்கும் ஆப்பிரிக்காவின் தெற்கு முனையைக் கண்டு பிடித்தான். அந்த நாட்டின் இயற்கை வளங்களையும் செல்வங்களையும் பற்றிய விவரங்கள் ஐரோப்பாவில் பரவின. அது முதல் ஐரோப்பிய சாதியார் பலர் தென்னாப்பிரிக்காவுக்கு வந்து குடியேறினார்கள். அப்படிக் குடியேறியவர்களில் மிகவும் முக்கியமானவர்கள் ஆங்கிலேயரும் டச்சுக்காரரும். முதன் முதலில் கேப் காலனி, நேட்டால் என்னும் மாகாணங்கள் ஏற்பட்டன. இரண்டும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு உட்பட்டிருந்தன. இந்த மாகாணங்களில் குடியேறியிருந்த டச்சுக்காரர்களுக்குப் 'போயர்கள்' என்ற பெயர் ஏற்பட்டது. ஆங்கிலேயருக்கும் போயர்களுக்கும் அடிக்கடி தகராறுகள் ஏற்பட்டு வந்தன. இந்தத் தகராறுகளில் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய சர்க்கார் ஆங்கிலேயருக்குச் சாதகமாக இருப்பதே இயல்பு அல்லவா? இதனால் போயர்களுக்கு ஆத்

திரமும் அருவருப்பும் உண்டாயின. அவர்கள் தாங்கள் அதுவரை வசித்து வந்த இடங்களை விட்டுவிட்டு, தென்னாப்பிரிக்காவில் பிரிட்டிஷ் ஆதிக்யத்துக்கு அப்பால் இருந்த புதிய பிரதேசங்களுக்குச் சென்று குடியேறிச் சுதந்திரக் குடியரசுகளை ஏற்படுத்திக் கொண்டார்கள். இப்படி ஏற்பட்ட சுதந்திர போயர் குடியரசுகளுக்கு டிரான்ஸ்வால் என்றும், ஆரஞ்சு பிரீ ஸ்டேட் என்றும் பெயர்கள் ஏற்பட்டன.

போயர்கள் தனிக் குடியரசுகள் ஏற்படுத்திக் கொண்டதை ஆங்கிலேயர் விரும்பவில்லை. டிரான்ஸ்வால் மாகாணத்தில் தங்கச் சுரங்கங்களும் வைரச் சுரங்கங்களும் ஏராளமாகக் கண்டு பிடிக்கப் பட்டன. இதற்குப் பிறகு ஆங்கிலேயரின் வயிற்றெரிச்சலும் ஆத்திரமும் அதிகமாயின. சில இங்கிலீஷ்காரர்கள் தங்களுடைய சொந்தப் பொறுப்பில் இரகசியமாக ஒரு படை தயார் செய்துகொண்டு, ஜோகானிஸ்பர்க் வைரச் சுரங்கங்களைப் பலாத்காரமாகக் கைப்பற்றுவதற்காகச் சென்றார்கள். அப்போது டிரான்ஸ்வால் குடியரசின் தலைவரா யிருந்த பிரஸிடெண்ட் க்ருகர் மகா சாமர்த்திய சாலி. படையெடுப்பின் விஷயம் அவருக்கு ஏற்கெனவே தெரிந்திருந்தது. எனவே படையெடுத்து வந்த ஆங்கிலேயரின் படையைப் படுதோல்வி அடையச் செய்தார். ஜோகானிஸ்பர்க்கில் சில இங்கிலீஷ் முதலாளிகளும் இருந்தார்கள். அவர்கள் படையெடுத்துவந்த இங்கிலீஷ் படைக்குச் சாதகமாகக் கலகம் செய்யத் தயாரா யிருந்தார்கள் என்று கண்டுபிடித்து அவர்களையும் க்ருகர் கைது செய்தார். அந்த முதலாளிகளுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. அவர்கள்பேரில் கருணை காட்ட வேண்டும் என்று பிரிட்டிஷ் ஏகாதிபத்திய மந்திரிகள் போயர் சர்க்காருக்குத் தந்தி அடித்தார்கள். பிரஸிடெண்டு க்ருகரும் தம்முடைய கட்சி பூரண வெற்றியடைந்து விட்டபடியால் கலகக்காரர்களை மன்னித்து விட்டு விட்டார்.

விஷயம் இத்துடன் முடிவடைந்துவிடவில்லை. ஆங்கிலேயர் தங்களுக்கு ஏற்பட்ட தோல்வியையும் அவமானத்தையும் மறக்கவில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்திய சர்க்காரும் அப்படித்தான். எனவே டிரான்ஸ்வாலிலும் ஆரஞ்சு ஸ்டேட்டிலும் இருந்த சுதந்திர போயர் அரசாங்கங்களை பிரிட்டிஷார் பலவிதத்திலும் நெருக்க ஆரம்பித்தார்கள். நாளுக்குநாள் நெருக்கடி முற்றிக் கொண்டு வந்தது. யுத்தம் மூண்டுதான் தீரும் என்ற நிலைமை ஏற்பட்டபோது போயர்கள் பிரிட்டிஷார் யுத்தம் தொடங்கும் வரையில் காத்திருக்க விரும்பவில்லை. தாங்கள் முந்திக் கொள்ள விரும்பினார்கள். ஆரம்பத்தில் போயர்கள் படையெடுத்துத் தாக்கியது பிரிட்டிஷாரைத் திக்கு முக்காடச் செய்தது. போயர் சைனியம் வெற்றிமேல் வெற்றி அடைந்து வந்தது. பிறகு இங்கிலாந்திலிருந்து பிரசித்திபெற்ற தளபதியான லார்ட் கிச்சனர் வந்து சேர்ந்தார். சில காலைக்கெல்லாம் யுத்தப்போக்கு திரும்பியது. போயர் சைனியம் முறியடிக்கப்பட்டது. ஆயினும் போயர்களின் உறுதிமட்டும் தளரவில்லை. தோல்விக்குப் பிறகும் பணிய மறுத்தார்கள். போயர் ஸ்திரீகள் ஆண் பிள்ளைகளைக் காட்டிலும் தீரம் காட்டினார்கள். எனவே ஆயிரக் கணக்கான போயர் ஆண்களையும் பெண்களையும் ஒன்று திரட்டி இரும்பு முள்வேலிக்குள் அடைத்துக் காவல் போட்டு வைக்க வேண்டி நேர்ந்தது. காவலுக்குள் இருந்தவர்கள் சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு உள்ளானார்கள். இங்கிலாந்தில் இருந்த சில ஆங்கிலப் பெரியார்களுக்கு இது பொறுக்கவில்லை. மிஸ்டர் ஸ்டெட் என்பவர் "தென்னாப்பிரிக்காவில் இங்கிலீஷ் படை தோற்கவேண்டும்" என்று பகிரங்கமாகப் பிரார்த்தனை செய்தார். பிரிட்டிஷ் பொது மக்களின் அபிப்பிராயமும் அந்தப் பக்கம் திரும்பியது. இதன் பயனாக, ஜயித்த பிரிட்டிஷ் சர்க்கார் வலியச் சென்று தோற்ற போயர்களுடன் சமரசம் பேச வேண்டிய அவசியம் நேர்ந்தது. கடைசியில் ஒரு சமாதான உடன்படிக்கை 'வெரீநிகில்' என்ற இடத்தில் ஏற்பட்டது. இதன்படி போயர் குடியரசுகள் பெயரளவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டுமென்றும் மற்றப்படி பூரண சுதந்திரத்துடன் ஆட்சி நடத்தலாம் என்றும் ஏற்பட்டது.

தென்னாப்பிரிக்காவுக்குப் பூரண சுதந்திரம் என்று சொல்லும்போது அங்கேயிருந்த ஆங்கிலேயருக்கும் போயருக்கும் பூரண சுதந்திரம் என்றுதான் பொருள். பூர்வீகக் குடிகளான நீக்ரோவர்களுக்கும் சுதந்திரம் கிடையாது; இங்கிலீஷ்காரர்களைப் போலவே வந்து குடியேறிய இந்தியர்களுக்கும் சுதந்திரம் கிடையாது.

இந்தியர்கள் தென்னாப்பிரிக்காவில் வந்து குடியேறிய வரலாறு பற்றியும் இங்கே ஞாபகப்படுத்திக் கொள்ளலாம். முதன்

முதலில் தென்னாப்பிரிக்காவில் குடியேறிய ஐரோப்பியர்கள் ஏராளமான பூப்பிரதேசங்களைத் தங்களுக்குச் சொந்தமென்று வளைத்துக் கட்டிக் கொண்டார்கள். ஆனால் அந்த நிலங்களைப் பண்படுத்திச் சாகுபடி செய்ய அவர்களுக்குக் கூலியாட்கள் தேவையாயிருந்தது. ஆப்பிரிக்கா சுதேசிகளோ சரியாக வேலை செய்யமாட்டார்கள். இந்தியர்கள் நல்ல உழைப்பாளிகள் என்பது பிரசித்தம். ஆகையால் இந்தியாவிலிருந்து 'ஐந்து வருஷம் வெள்ளைக்காரர் கீழ் வேலை செய்வது' என்னும் ஒப்பந்தத்தின் பேரில் ஆட்களைக் கொண்டுவர அவர்கள் விரும்பினார்கள். ஐந்து வருஷம் ஆனபிறகு அந்தக் கூலி இந்தியர்கள் தென்னாப்பிரிக்காவில் நிலம் வாங்கிக்கொண்டு சுதந்திரமாக வாழலாம் என்று ஆசை காட்டினார்கள். அப்போது இந்தியாவை பிரிட்டிஷார் ஏறக்குறைய யதேச்சாதிகாரத்துடன் ஆண்டார்கள். தென்னாப்பிரிக்கா வெள்ளைக்காரர்களுக்கு உதவிசெய்ய இந்தியாவின் பிரிட்டிஷ் சர்க்கார் விரும்பினார்கள். ஒப்பந்தக் கூலி முறைக்குச் சம்மதித்தார்கள். இதன்படி 1860-ம் வருஷத்தில் முதன் முதலாக இந்தியத்தொழிலாளிகள் ஒப்பந்தக் கூலி முறையின் கீழ் தென்னாப்பிரிக்கா சென்றார்கள். நாளடைவில் அதிகமாகச் சென்றார்கள். ஒப்பந்தத் தவணை முடிந்த பிறகு பலர் சுதந்திரமாக வாழவும் ஆரம்பித்தார்கள். பாட்டாளி இந்தியர்களைத் தொடர்ந்து இந்திய வியாபாரிகளும் அவர்களுடைய குமாஸ்தாக்களும் தென்னாப்பிரிக்கா சென்றார்கள். அவர்கள் தொழிலாளி இந்தியர்களுடனும் ஆப்பிரிக்காவின் சுதேசிகளுடனும் வியாபாரம் செய்தார்கள். வெள்ளைக்கார வியாபாரிகள் இது தங்களுடைய தொழிலுக்குப் போட்டி என்பதாக ஆத்திரம் கொண்டார்கள். தொழிலாளி இந்தியர்கள் சொந்தமாக நிலம் வாங்கிப் பயிர் செய்வது பற்றியும் பொதுவாக வெள்ளைக்காரர்களுக்கு அசூயை ஏற்பட்டது. இப்படியே விட்டுக் கொண்டு போனால் ஆப்பிரிக்காவில் வெள்ளைக்காரர்களின் ஆதிக்கத்துக்கு ஆபத்து வந்துவிடும் என்றும் கறுப்பு மனிதர்களின் கை ஓங்கிவிடும் என்றும் வெள்ளைக்காரர்கள் எண்ணினார்கள். எனவே, இந்திய வியாபாரிகளுக்கும், ஒப்பந்தத் தவணை முடிந்து சுதந்திர வாழ்க்கை தொடங்கிய இந்தியத் தொழிலாளிகளுக்கும் பல இடையூறுகள் விளைவிக்கத் தொடங்கினார்கள். வெள்ளைக்காரர்கள் தனிப்பட்ட ஹோதாவிலும் இந்தியர்களுக்குத் தொல்லை கொடுத்தார்கள். சர்க்கார் என்ற முறையில் இந்தியர்களுக்கு விரோதமான சட்டதிட்டங்களும் செய்தார்கள். இப்படி இந்தியர்களுக்கு அநீதி இழைப்பதில், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த நேட்டால்—கேப் காலனி மாகாணங்களோடு டிரான்ஸ்வால்—ஆரஞ்சு பிரீஸ்டேட் மாகாணங்களில் இருந்த போயர் குடியரசுகள் போட்டியிட்டன. ஆங்கிலேயரை விடப் போயர்கள் இந்தியர்கள் விஷயத்தில் அதிகக் கடுமையாயிருந்தார்கள்.

இத்தகைய நிலைமையில் 1893-ம் வருஷத்தில் தெய்வ சங்கல்பத்தினால் காந்தி மகாத்மா தென்னாப்பிரிக்கா போய்ச் சேர்ந்தார். தாதா அப்துல்லா கம்பெனியார் சார்பில் டிரான்ஸ்வாலில் நடந்து வந்த ஒரு வழக்கில் உதவி செய்வதற்காகக் காந்திஜி போனார். ஆனால் போன உடனேயே அவர் அடைந்த அநுபவங்கள் தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் பரிதாப நிலைமையை அவருக்கு உணர்த்தின. நேட்டால் காங்கிரஸ் ஏற்படுத்தி இந்தியரின் வோட்டுரிமையை நிலைநாட்டக் கிளர்ச்சி நடத்தினார். ஒப்பந்தம் நீங்கிய இந்தியத் தொழிலாளிகளின் மீது விதிக்கப்பட்ட தலைவரியை எதிர்த்துக் கிளர்ச்சி நடத்தினார். மற்றும் இந்தியர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகள் எல்லாவற்றையும் எதிர்த்துப் போராடினார். ஆனால் இதுவரையில் கையாண்ட போராட்ட முறைகள் மகஜர் அனுப்புவது, மகாநாடு கூட்டுவது, பத்திரிகைகளில் எழுதுவது, வெளிநாட்டில் பிரசாரம் செய்வது ஆகிய காரியங்களோடு நின்றன.

1899-ம் ஆண்டில் போயர் யுத்தம் ஆரம்பித்தபோது காந்திஜி பிரிட்டிஷ் தரப்பில் இந்தியர்கள் உதவி செய்யவேண்டுமென்று கருதினார். அதற்காக ஒரு சைனிய சேவைப்படை அமைத்துத் தாமே அதற்குத் தலைமை வகித்துப் போர்க்களம் சென்றார்.

இவ்விதம் நெருக்கடியான சமயத்தில் உதவி செய்ததினால் எதிர்பார்த்த பலன் கிட்டவில்லை. போயர் யுத்தத்துக்குப் பிறகு டிரான்ஸ்வாலில் ஆசிய இலாகா என்பதாக ஒன்று ஏற்பட்டது. இந்த இலாகாவினால் இந்தியர்களுக்கு ஏற்பட்ட தொல்லைகளை நீக்கக் காந்திஜி பாடுபட்டார். ஓரளவு வெற்றியும் கிடைத்தது. பின்னர் ஸுலு கலகத்தின் போதும் காந்திஜியின் தலைமையில் இந்திய சேவைப்படை தொண்டு செய்தது. இதனால் தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களின் குறைகள் நீங்கும் என்றும்

அவர்களுடைய அந்தஸ்து உயரும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. இப்பேர்ப்பட்ட சமயத்திலேதான் டிரான்ஸ்வாலை ஆண்ட போயர் சர்க்கார் இந்தியரின் தலையிலே போடுவதற்கு ஒரு பெரிய வெடி குண்டைத் தயாரித்தார்கள். மிஸ்டர் லயனல் கர்ட்டிஸ் என்ற ஒரு ஆங்கிலேய 'மகான்' அப்போது தென்னாப்பிரிக்காவுக்கு வந்திருந்தார். இந்தியர்கள் கை ஓங்குவதற்கு இடங் கொடுத்தால் தென்னாப்பிரிக்காவில் ஐரோப்பியரின் வாழ்வுக்கே அபாயம் வந்துவிடும் என்று அவர் சொன்னார். அதைத் தடுப்பதற்குச் சில யோசனைகளைச் சொன்னார். இந்த யோசனைகளை டிரான்ஸ்வால் சர்க்கார் ஏற்றுக்கொண்டு அவற்றை அநுசரித்த ஆசியச் சட்டத் திருத்த மசோதா ஒன்றைத் தயாரித்தார்கள். இந்த மசோதாவில் முக்கியமான நிபந்தனை என்னவென்றால், டிரான்ஸ்வாலில் அப்போது வசித்த ஒவ்வொரு இந்தியரும் தாங்கள் டிரான்ஸ்வாலில் வசிப்பதற்குப் புதிதாக அநுமதிச் சீட்டுப் பெறவேண்டும். அதற்காக விண்ணப்பம் போடவேண்டும். விண்ணப்பத்தில் பெயர், சாதி, வயது, இருப்பிடம் ஆகியவை குறிப்பிடவேண்டும். அது மட்டும் போதுமா? போதாது. விண்ணப்பத்தை அங்கீகரிக்க வேண்டிய ரிஜிஸ்ட்ரார், ஆசாமியின் அங்க அடையாளங்களைக் குறித்துக் கொள்வார். இது மட்டுமல்லாமல் ஒவ்வொரு இந்தியரும் தங்களுடைய பத்து விரல்களையும் கறுப்பு மையில் தோய்த்து ரேகை அடையாளம் கொடுக்க வேண்டும். இப்படிப் பதிவு செய்து கொள்ளாதவர்களுக்கு டிரான்ஸ்வாலில் வசிக்கும் உரிமை கிடையாது. குழந்தைகளுக்காகப் பெற்றோர்கள் விண்ணப்பம் போட வேண்டும். ஸ்திரீகளும் குழந்தைகளும் கூட ரிஜிஸ்ட்டிரார் காரியாலயத்துக்குப் போய்ப் பத்து விரல்களின் அடையாளத்தையும் பதிவு செய்ய வேண்டும். விண்ணப்பத்தின் பேரில் கிடைக்கும் அநுமதிச் சீட்டை இந்தியர்கள் எப்போதும் கையில் கொண்டு போகவேண்டும். எந்தப் போலீஸ்காரன் எப்போது கேட்டாலும் காட்டவேண்டும். காட்டாவிட்டால் அபராதமோ சிறை வாசமோ விதிக்கப்படும். இத்தகைய அவமானகரமான நிபந்தனைகள் அடங்கிய சகல மசோதா 1906-ல் டிரான்ஸ்வால் சர்க்கார் கெஜட்டில் பிரசுரிக்கப்பட்டது. இந்தியர்கள் புதிதாக டிரான்ஸ்வாலுக்குள் வருவதைத் தடுப்பதற்காக இந்த ஏற்பாடு செய்யப்படுகிறது என்று காரணம் சொன்னார்கள்.

ஸுலூக் கலகத்தில் காந்திஜி சேவை செய்து கொண்டிருந்த சமயத்தில் இந்த மசோதா வெளியாயிற்று. அதை உடனே சில நண்பர்கள் காந்திஜிக்கு அனுப்பினார்கள். அதைப் படித்துப் பார்த்தபோது காந்திஜியின் உள்ளம் கொதித்தது. இந்தியர்கள் இத்தகைய அவமானங்களுக்கு உட்படுத்தப் படுவதைக் கண்டு ஆத்திரப்பட்டார். அச்சமயம் டிரான்ஸ்வாலில் வசித்த சுமார் பதினையாயிரம் இந்தியர்களை மட்டும் அது பாதிப்பதாகக் காந்தி மகான் கருதவில்லை. இந்தச் சட்டத்துக்கு இடம் கொடுத்தால் தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்கள் எல்லாருடைய வாழ்வையுமே அது பாதிக்கும் என்று காந்திஜி கருதினார். இதைப் பார்த்து மற்ற மாகாணங்களும் அதுமாதிரியான சட்டங்களைச் செய்யக்கூடும் அல்லவா?

நேட்டாலில் சுதந்திரம் பெற்ற ஒப்பந்தக் கூலிகளை மட்டும் பாதிக்கும் சில சட்டங்கள் அமுலில் இருந்தன. ஆனால் இந்த டிரான்ஸ்வால் சட்டமோ எல்லா இந்தியர்களையும் பாதிப்பது; அதோடு நேட்டால் சட்டங்களை விடக் கடுமையானது, அவமானகரமானது. ஆகவே இந்தக் கொடிய சட்டத்தைக் 'கறுப்புச் சட்டம்' என்று காந்திஜி அழைத்தார்.

ஜோகானிஸ்பர்க் வந்த மறுதினமே சில பிரபல இந்தியர்களின் கூட்டம் ஒன்று கூட்டினார். அதில் மசோதாவின் நிபந்தனைகளை ஒவ்வொன்றாக எடுத்து விளக்கினார். அதையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டவர்கள் எல்லாரும், "இவ்வளவு மோசமான நிபந்தனைகளா?" என்று ஆச்சரியப்பட்டார்கள். ஒருவர் மிக்க ஆத்திரத்துடன், "யாராவது என் மனைவியிடம் வந்து ரிஜிஸ்ட்ரேஷன் சர்டிபிகேட் எங்கே என்று கேட்டால் அவனை உடனே நான் சுட்டுத் தள்ளிவிடுவேன். அதனால் ஏற்படும் பலாபலன்களை அநுபவிப்பேன்!" என்றார். காந்திஜி அவரைச் சமாதானப்படுத்தினார். இப்படிப் படபடப்பாகப் பேசுவதினால் பயனில்லை என்றும், இந்திய சமூகம் ஒருமுகமாக இந்தக் கறுப்பு மசோதாவை எதிர்த்துப் போராட வேண்டும் என்றும், நிதானமாகவும் தீர்க்கமாகவும் ஆலோசித்து நடவடிக்கைகளைப் பற்றித் தீர்மானிக்க வேண்டும் என்றும் கூறினார். எல்லாரும் அதற்கு இணங்கினார்கள். எனவே டிரான்ஸ்வால் இந்தியர்களின் பொதுக் கூட்டம் ஒன்று கூட்டி அதில் மேல் நடவடிக்கைகளைப் பற்றி முடிவு செய்வது என்று தீர்மானமாயிற்று.




# மிகவும் ருசிகரமானது மாத்திரமல்ல- இது நல்லது

**புஷ்டியளிக்கும் பதார்த்தங்கள் நிறைந்தது!**

போர்ன் - வீடாவில் 95 சதவிகிதம் எலும்பு வளர்ச்சிக்கும் ஜீவசக்தியளிப்பதற்குமான சரக்குகள் இருக்கின்றன. தவிர அது ருசியாகவும் ஜீர்ணத்துக்கு ஊன்றுகோலாகவும், எளிதில் ரத்தத்துடன் சேர்ந்து புஷ்டி தருவதாகவும் இருப்பதால் குறிப்பாக கர்ப்பிணிகளுக்கும் வியாதிக்குப்பின் குணமடையும் தருவாயிலும் இன்றியமையாத உணவாக விளங்குகின்றது.

## காட்பரீஸ்

# போர்ன்-வீடா

கால்ஷியம் விடமின்கள் நிறைந்தது

**காட்பரி என்பது சிறந்த ரகத்துக்கு அறிகுறி**

# அமாவாசை பிழைக்க வேண்டும்!

ரஜனி

இலங்கை, செப்டம்பர், 14உ

தென்னாப்பிரிக்காவை நாம் நினைக்கும் பொழுது ஜெனரல் ஸ்மட்ஸும், டாக்டர் மாலனும் எப்படி ஞாபகத்துக்கு வருகிறார்களோ, அதேபோல இலங்கையை நினைக்கும் பொழுது ஸ்ரீ குணசிங்காவின் ஞாபகம்தான் இந்தியர்களுக்கு முதலில் வரும். சுமார் இருபது அல்லது இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னால் ஸ்ரீ குணசிங்கா இந்தியத் தலைவர் ஸ்ரீ கோ. நடேசய்யருடன் சேர்ந்து இந்தியத் தொழிலாளர் பிரச்னைகளில் மிகுந்த ஊக்கம் காட்டினார். மகாத்மா காந்தி ஒரு சமயம் இலங்கைக்கு விஜயம் செய்தபொழுது மகத்தான வரவேற்புகளுக்கு ஏற்பாடு செய்து, அதன் மூலம் இலங்கை இந்தியத் தொழிலாளரின் பூரண அன்பையும் சம்பாதித்துக் கொண்டார். முக்கியமாகத் துறைமுகத் தொழிலாளிகள்தான் ஸ்ரீ குணசிங்காவைத் தொழிலாளர் தலைவராகச் செய்தார்கள்.

அவர், இந்தியத் தொழிலாளரின் ஆதரவினால் பெயரும் புகழும் சம்பாதித்துக் கொண்ட பின்னர், சிங்களத் தொழிலாளரைத் திரட்டிக்கொண்டு கடுமையான இந்தியத் துவேஷப் பிரசாரங்களில் ஈடுபட்டார். 1939-ம் ஆண்டில் முனிசிபல் வேலைகளிலும் அரசாங்க வேலைகளிலும் இருந்த தினச் சம்பள இந்தியத் தொழிலாளரை டிஸ்மிஸ் செய்து நாடு கடத்தும்படி தூண்டியவர் ஸ்ரீ குணசிங்காதான். அதுமட்டுமல்ல; இந்தியத் துவேஷத் தீயை அவர் அளவு மீறிக் கிளப்பிவிட்டபடியால் அடுத்தபடியாகப் பெரிய கலகம் நடக்குமோ என்றுகூட எல்லோரும் அஞ்சிக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் தற்செயலாக உலக மகா யுத்தம் மூண்டது. ஸ்ரீ குணசிங்காவுக்கு ஏகாதிபத்திய அரசாங்கம் வாய்ப்பூட்டு போட்டது. அவருடைய பிரசாரம் யுத்த நெருக்கடியில் பயன்படவில்லை.

## போர்வையை உதறித் தள்ளினர்!

யுத்தம் முடிந்து இலங்கைக்குப் புதிய அரசியலும் கிடைத்தபின் ஸ்ரீ குணசிங்கா மந்திரி சபையில் சேருவாரென்று ஒருவரும் எதிர்பார்க்கவில்லை. தொழிலாளர் இலட்சியங்களுக்கு முரண்பட்ட கொள்கையுடைய ஸ்ரீ சேனநாயகா மந்திரி சபைக்கு எல்லா இடதுசாரிக் கட்சிகளும் எதிர்க் கட்சிகளாகவே இருக்க விரும்பின. ஆனால் ஸ்ரீ குணசிங்காவின் பதவி ஆசை பிரதமர் சேனநாயகாவுக்கு நன்றாகத் தெரியும். ஸ்ரீ குணசிங்கா வெளியிலிருந்தால் எவ்வளவு தூரம் விஷமம் செய்யக்கூடுமென்பதையும் அவர் அறிவார். ஆகையால் வலை வீசி ஸ்ரீ குணசிங்காவைப் பிடித்துக் குறித்த இலாக்கா இல்லாத ஒரு மந்திரியாக அமர்த்தவே, ஸ்ரீ குணசிங்கா சோஷலிஸப் போர்வையைக் களைந்தெறிந்துவிட்டு மந்திரி பதவியை ஏற்றார்.

பார்லிமெண்டில் இலங்கைப் பிரஜா உரிமை மசோதாவையும் குடியேற்றக் கட்டுப்பாடு மசோதாவையும் கொண்டு வந்து நிறைவேற்றியவர் பிரதமர் சேனநாயகாதான் என்றாலும், அவருக்குப் பக்கபலமாக இருந்தவர்களுள் ஸ்ரீ குணசிங்காவுக்குத்தான் முதல் தாம்பூலம் கொடுக்க வேண்டும்.

## முற்ற விடாதீர்!

கொழும்பு துறைமுகத்தில் வேலை செய்யும் சுமார் 800 தொழிலாளிகளில் 650 பேர் இந்தியர்கள். பாக்கி 150 பேர்தான் சிங்களவர்கள். சென்ற வாரம் போக்குவரத்து மந்திரி ஸர் ஜான் கொத்தலாவலவும் மந்திரி ஸ்ரீ ஏ. இ. குணசிங்காவும் துறைமுகக் கண்ட்ராக்டர்களின் மகாநாடு ஒன்றைக் கூட்டிச் சில கடுமையான உத்தரவுகளைப் பிறப்பித்திருந்தார்கள்.

இதன்படி வேலைக்கு 50 இந்தியத் தொழிலாளரை அமர்த்தினால் 50 சிங்களவர்களையும் அமர்த்திக் கொண்டாக வேண்டும். இந்த 50% விகிதம் உடனே அமுலுக்கு வர வேண்டும். காலக்கிரமத்தில் துறைமுக வேலைகள் எல்லாவற்றிற்கும் இலங்கையர்களை நியமிப்பதே அரசாங்கத்தின் இலட்சி

யம். இவைதான் இரண்டு மந்திரிகளும் பிறப்பித்த உத்தரவுகள். இவை இந்தியத் தொழிலாளரைப் பெரிதும் பாதித்திருக்கிறது.

இந்தியர் பிரஜா உரிமை மசோதா சட்டமாக்கப்பட்டு, இங்குள்ள இந்தியர்களில் யார் யார் இலங்கையர்கள் என்பதைத் தீர்மானித்த பின்னர், மேற்கண்ட நடவடிக்கைகளை மந்திரி எடுத்திருந்தால் யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். இந்தியர் பிரச்னையில் ஒரு சமரச முடிவு செய்வதன் முன்பாகவே இந்தியர்களைப் படிப்படியாக விரட்டியடித்து விடுவதற்கு மந்திரிகள் திட்டமிட்டிருப்பதின் அறிகுறிகள்தான் துறைமுகத்தில் ஆரம்பித்திருக்கும் 'டிஸ்மிஸ்' நடவடிக்கைகள்.

## மீண்டும் துவேஷப் பிரசாரம்

இதற்கிடையில், இங்கு இந்தியர்கள் மீது கடுமையான துவேஷப் பிரசாரம் ஆரம்பமாகியிருக்கிறது. இந்தியர்களை அவமதித்துச் சிங்கள பாஷையிலும் தமிழிலும் கொச்சைப் பாட்டுப் புத்தகங்கள்கூட வெளியாகின்றன. இந்தத் துவேஷப் பிரசாரத்தை முளையிலேயே கிள்ளியெறிய வேண்டியது பொறுப்புள்ள சர்க்காரின் கடமை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அவ்விதமின்றி அத்தகைய பிரசாரத்தை முற்ற விட்டால், அது எதில் வந்து முடியுமோ?

இலங்கையில் பௌர்ணமி ஒரு புனித தினம். புத்த பகவான் ஞானோதயம் பெற்று நிர்வாண நிலையை அடைந்தது பௌர்ணமியில்தான். ஆகையால் பிரதி மாதமும் பௌர்ணமி தினம் பௌத்தர்களுக்கு ஒரு விடுமுறைநாள். அன்று பௌத்தக் கோயில்களில் விசேஷ பூஜைகளெல்லாம் நடக்கும். மதவிஷயத்தில் பௌர்ணமிக்குள்ள முக்கியத்துவம் அரசியலில் அமாவாசைக்கு ஏற்பட்டுவிட்டது போலும்! ஆடி அமாவாசையன்று இந்தியர்களை வெளியேற்றும் இரண்டு மசோதாக்கள் இலங்கை பார்லிமெண்டில் கொண்டு வரப்பட்டன. ஆவணி அமாவாசையன்று அரசியல் விரோதிகளான ஸ்ரீ பொன்னம்பலமும் ஸ்ரீ சேனநாயகாவும் நண்பர்களாகி ஸ்ரீ பொன்னம்பலம் கைத்தொழில், மீன் இலாக்கா மந்திரியாக விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார். இவற்றைப் போல் வேறு புதுமை எதுவும் நேராமல் புரட்டாசி அமாவாசை பிழைக்க வேண்டும்!

# போட்டிக் கதைகள்

•

1947-ம் வருஷத்துக் கல்கி சிறுகதைப் போட்டிக்கு வந்த கதைகளில் பிரசுரத்துக்கு ஏற்றவை என்று தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் :—

•

1. புது வாழ்க்கை
   எம். என். சுப்பிரமணியம்
2. தனிக் குடித்தனம்
   பி. சு. கைலாசம்
3. தாயின் பூரிப்பு
   சி. கனகசபாபதி
4. மருடி
   நாபன்
5. குற்றாலத்தில்......
   துஷ்யந்தன்
6. அங்கமுத்து
   கமலாசுந்தரம்
7. பழி
   ந. ஆறுமுகம்
8. வாத்தியார் ஐயா
   ஸ்ரீ. நாராயணசாமி
9. அவள் பாக்கியசாலி
   எம். என். கமலா
10. எதிர்பாராதது
    வள்ளி
11. காளை மாடு
    ஸ்ரீவத்ஸ
12. இஞ்சினும் காதலும்
    டி. ஆர். குருசாமி
13. வாழ்க்கை
    கி. ராமதுரை
14. எது கடமை?
    லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி
15. பெற்ற மனம்
    என். விஜயராகவன்
16. இடியிலே மின்னல்
    சிவகாமு
17. ஞானோதயம்
    மாயா

# வீண் வம்பு

கி. ரங்கராஜன்

ராமச்சந்திரன், கல்யாணியைக் கல்யாணம் செய்துகொண்டு சரியாக ஐந்து வருஷங்களாகின்றன. இது வரையில் அவர்களுக்குள் மனஸ்தாபமோ அல்லது அபிப்பிராய பேதமோ ஏற்பட்டது கிடையாது. காரணம், ராமச்சந்திரன் தன் மனைவியிடம் சகல அதிகாரத்தையும் ஒப்புவித்து விட்டதுதான். முதல் தேதி சம்பளம் வாங்கினவுடன் பைசா பாக்கியில்லாமல் அவ்வளவு பணத்தையும் மனைவியிடம் கொடுத்து விடுவான். ஆனால், ஸ்டாம்புக்காக ஓர் அணு பிடித்துக் கொண்டு விடுகிறார்கள் என்று அவன் சொல்லுவதை நாளைக்கும் கல்யாணி நம்பத் தயாராயில்லை!

அன்று முதல் தேதி. சம்பளம் வாங்கினவுடன் என்றுமில்லாத வழக்கமாக ராமச்சந்திரன் நேராக ஜவுளிக் கடைக்குப் போனான். அங்கே நாகரிகமாக உடை அணிந்த பெண் ஒருத்திக்குக் கடைக்காரர் ஏதோ ஒரு ஸில்க் புடவையைப் பிரித்துக் காட்டிக் கொண்டிருந்தார். இதுவரை யாரும் அணிந்து பார்க்காத புது மாதிரியாக இருந்தது அந்தப் புடவை.

"மிக அருமையான புடவை, அம்மா! மாதிரிக்கு ஒன்றுதான் தருவித்திருக்கிறோம்" என்றார் கடைக்காரர்.

"இந்தப் படவைக்கு என்ன பெயர்?"

"பெயர் இன்னும் ஏற்படவில்லை."

"இதுமாதிரி இன்னொன்று வேண்டுமானால் வரவழைத்துக் கொடுப்பீர்களா?"

"ஏது, முடியாது!" என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கும்போது, யாரோ ஒருவர் அவரைக் கூப்பிட்டார். அவர் போனவுடன், அங்கே சிறுவனாக இருந்த வேறொரு பையனைப் பார்த்து அந்த அம்மாள், "எனக்கு இது மாதிரி வேறொரு புடவை வேண்டும். கிடைக்குமா?" என்று மீண்டும் கேட்டாள்.

பையன் விஷயம் தெரியாதவன்; அன்றியும் வேலைக்குப் புதிது; உண்மையைச் சொல்லி விட்டான். "இது மாதிரிதானே உங்களுக்கு வேண்டும்? உள்ளே யிருக்கிறது, கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு, அவ்வாறே கொண்டு வரவும் செய்தான். சந்தேகம் இல்லை; இரண்டு புடவையும் ஒன்றுதான். கடைக்காரர் வேண்டுமென்றே பொய் சொல்லி விட்டார். அவ்வளவுதான்; அந்தப் புடவை ஒன்றுக்கு மேற்பட்டிருக்கவே, அதை வாங்குவதற்கு அவள் இஷ்டப்படவில்லை. பேசாமல் கடையை விட்டுப் போய் விட்டாள்.

இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த ராமச்சந்திரனுக்கு ஆச்சரியமாக இருந்தது. எதற்காக அவள் அந்தப் புடவையை வேண்டாம் என்று சொல்லி விட்டாள் என்பது அவனுக்குப் புரியவில்லை. தானுந்தான் ஒரு வியாபாரம் பண்ணுவோமே என்று நினைத்தான். புடவையும் நன்றாக இருந்தது. அந்தப் புடவைகளில் ஒன்றை விலை தீர்த்து வாங்கிக் கொண்டான். விலையும் அதிகமில்லை. வீட்டிற்கு வந்ததும் சம்பளப் பணத்தை எண்ணி மனைவியின் கையில் கொடுத்தான்.

"பதினேழு ரூபாய் குறைகிறதே!" என்றாள் கல்யாணி.

"உனக்குப் புடவை ஒன்று வாங்கி வந்திருக்கிறேன்."

"புடவையா! புடவை வாங்குவதற்கு உங்களுக்கு என்ன தெரியும்?"

"ஏன் தெரியாது, இதைப் பார்!" என்று சொல்லிப் புடவையைப் பிரித்துக் காட்டினான்.

புடவை மிகவும் நன்றாயிருந்தது. கல்யாணி பிரமித்துப் போய்விட்டாள். "இந்தப் புடவைக்கு என்ன பெயர்?" என்று கேட்டாள்.

"புடவைக்குப் பெயர் இன்னும் வைக்கவில்லையாம்!"

"அப்படியென்றால்......?"

"முதன் முதலாக இப்பொழுதுதான் வந்திருக்கிறது. மாதிரிக்காக வந்த புடவையை நான் வாங்கிக்கொண்டு வந்து விட்டேன்."

கல்யாணிக்கு உவகை தாங்கவில்லை; எழுபதும் ஐம்பதும் போட்டு வாங்கின புடவை கூட அவளுக்கு அவ்வளவு சந்தோஷத்தைக் கொடுத்ததில்லை.

அன்றிரவு சாப்பிட்டானதும் தம்பதிகள் மாடிக்குப் போனார்கள்.

"உன் அக்கா சீமந்தம் எப்பொழுது?" என்று கேட்டான் ராமச்சந்திரன்.

"நாளை எட்டாவது நாள் சீமந்தம்; உங்களுக்கு நினைவில்லையோ?"

"நினைவிருக்கிறது; அதனால்தான் புதிதாக இருக்கட்டுமே என்று நினைத்து இந்தப் புடவையை வாங்கி வந்தேன். உனக்குத் திருப்திதானே?"

"பரிபூரணமான திருப்தி. உங்களுக்குக் கூடப் புடவை வாங்கத் தெரிந்திருக்கிறதே என்று எனக்கு ஒரே ஆச்சரியமாக இருக்கிறது!"

"போகிறது; நீ திருப்தி அடைந்தால் சரிதான்!" என்றான் ராமச்சந்திரன்.

அடுத்த நாள் அந்தப் புதுப் புடவையைக் கட்டிக் கொண்டு தன் சிநேகிதிகளில் ஒருத்தி பாக்கியில்லாமல் எல்லோருடைய வீட்டுக்கும் போய்விட்டு வந்தாள் கல்யாணி. அவளுடைய புதுப் புடவையைப் பார்த்து எல்லாரும் அதிசயித்துப்போய்விட்டார்கள். கல்யாணிக்கு உவகையும் பெருமையும் தாங்கவில்லை. அன்று இரவு ரொம்ப நாழிகை கழித்து வீட்டுக்கு வந்தாள்.

கூடத்தில், வீட்டின் வேலைக்காரனும் அவனுடன் ஒரு பெண்ணும் நின்று கொண்டிருந்தனர். பெண் நாணிக் கோணிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும், அவள் அவனுடைய புதிய மனைவி என்று கல்யாணி தெரிந்து கொண்டாள்.

"உங்களுக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறோம், அம்மா!" என்றான் வேலைக்காரன்.

"உன் மனைவியா!" என்று சொல்லிக் கொண்டே மீண்டும் அவளை ஒரு முறை பார்த்தாள் கல்யாணி. என்ன ஆச்சரியம்! கல்யாணி உடுத்திக் கொண்டிருந்த அதே மாதிரி புடவையை அவளும் உடுத்தியிருந்தாள். அவளை வெறிக்கப் பார்த்தாள் கல்யாணி. அந்தப் பார்வையில் கோபமும் துக்கமும் ஏமாற்றமும் தாண்டவமாடின.

"நீங்களும் இவளுக்கு எடுத்த புடவை போலத்தான் எடுத்திருக்கிறீர்கள், அம்மா!" என்றான் வேலைக்காரன்.

"எந்தக் கடையில் வாங்கினாய்?" என்று கேட்டாள் கல்யாணி, ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு.

"இந்தப் புடவை எல்லாக் கடையிலும் தான் இருக்கிறதே, அம்மா! இப்பொழுதெல்லாம் இந்த மாதிரிப் புடவையைத் தான் எல்லோரும் கட்டுகிறார்களாம்!" என்றான் அவன்.

அவ்வளவுதான்; ஒரு வாரம் தம்பதிகள் இருவரும் பேசிக் கொள்ளவில்லை!

---

# காலக்ஷேபம்

**மனைவி:**—என்ன, இங்கே வேடிக்கை பார்க்கத்தானே வந்தோம்? அதை விட்டுவிட்டு நீங்கள் மாத்திரம் பத்திரிகை படிக்க ஆரம்பித்துவிட்டீர்களே!

**கணவன்** (பத்திரிகை விற்கும் பையனை அழைத்து):—அடே, பையா! இன்னொரு பத்திரிகை கொடு!

★

**பால்காரன்** (போலீஸ் அதிகாரியிடம்):—ஐயா, ஒருவர் என்னிடம் ஒரு மாசமாகப் பால் வாங்கிவிட்டுக் கடைசியில் பணத்தைக் கொடுக்காமல் ஊரை விட்டே போய் விட்டார்! என் பணம் இனிமேல் போனது தானா? அவரைப் பிடிக்க வழியில்லையா?

**போலீஸ் அதிகாரி:**—நீ தண்ணீர் கலந்த பாலைத்தானே கொடுத்தாய்?

**பால்காரன்:**—அதுதானே இல்லை! அவர் புதிதாக என்னிடம் வாடிக்கை வைத்துக் கொண்டதால் சுத்தப் பாலாகவே கொடுத்தேன். தண்ணீர் கலப்பதற்குள்ளே தான் அவர் மோசம் செய்துவிட்டாரே!

கூட்டம் அதிகமாயிருந்த ஒரு ரயில் வண்டியில் ஒருவன் எல்லோரையும் தள்ளிக் கொண்டு நுழைந்து ஒரு பெரிய பெட்டியைத் தூக்கி மேல் தட்டில் வைத்தான். அது கீழே விழுந்து விடும்போல் இருந்தது.

**ஒரு பிரயாணி:**—மிஸ்டர், பெட்டியை மேலே ஜாக்கிரதையாகத்தானே வைத்திருக்கிறீர்கள்?

**வந்தவர்:**—ஆகா! பெட்டி சர்வ ஜாக்கிரதையாகப் பூட்டித்தான் இருக்கிறது!

★

**நண்பர்:**—உங்களுக்கு என்ன, அப்படி ரொம்ப வயதாகி விடவில்லையே! அதற்குள் தலையில் வழுக்கை விழுந்துவிட்டதே!

**இன்னொரு நண்பர்:**—வாஸ்தவந்தான்; எனக்கு வயதாகவில்லை. ஆனால் மனக் கவலைதான் காரணம்.

**நண்பர்:**—அப்படி என்ன கவலை வந்து விட்டது உங்களுக்கு?

**இன்னொரு நண்பர்:**—இப்படித் தலை வழுக்கை விழுந்துவிட்டதே என்றுதான்!

'நான் முந்தி'
'நான் முந்தி'
என்று
அனைவரும் போட்டி
போடுகிறார்கள்
ஹமாம் ஸோப்புத் தேய்த்து
அவர்கள்
அன்றாட ஸ்நானத்திற்கு




# ஹமாம் ஸோப்பு

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி, லிமிடெட்




(சென்ற வாரத் தொடர்ச்சி)

4

என் எதிர்கால வாழ்க்கையைக் குறித்து நான் நிர்மாணித்திருந்த மனக்கோட்டையை அந்தக் கடிதம் தகர்த்தெறிந்து விட்டது; நான் யாரை என் உயிரினும் அதிகமாக நேசித்தேனோ அவளுடைய அன்பு வேறொருவனுக்கு அர்ப்பணமாக்கப் பட்டு விட்டது; என் வாழ்க்கை நூலில் காதலின் அத்தியாயம் முடிவடைந்து விட்டது. ஆனால், இயற்கை அன்னையின் வலிமை மிக்க கரங்கள் என்றாவது ஒருநாள் இல்லறம் எனும் குழியில் என்னைத் தள்ளாமல் விடப் போவதில்லை. என் பெற்றோரும், ஒரே பிள்ளையாகிய நான் பிரம்மச்சாரியாக வாழ்க்கை நடத்த ஒருபோதும் சம்மதிக்க மாட்டார்கள். என்றைக்காவது ஒருநாள் என் தலையில் ஒரு பெண்ணைக் கட்டி வைக்காமல் அவர்கள் சும்மா விடப்போவதில்லை. சரோஜாவே அந்தப் பெண்ணாயிருந்து விட்டுப் போகட்டுமே!

இவ்வாறு மனம் ஆராயத் தொடங்கவே, சரோஜாவை மணந்து கொள்வதென்று முடிவு செய்து கொண்டேன். அன்று இரவே என் தீர்மானத்தை அப்பாவிடம் தெரிவித்தேன். எதிர்பாராத என் போக்கு அவரைத் திடுக்கிடச் செய்தது. "நன்றி கெட்ட பயலே!" என்று என்மேல் சீறினார். "வாழ்வடைய விரும்பினால் ருக்குவை மணந்து கொள். எளிய சம்பந்தமே ஏற்றது. பணத்தை விடக் குணமே இல்லற வாழ்க்கையில் இன்பந் தரும்" என்று நயமாகக் கூறினார். என் உறுதி தளராததைக் கண்டு, "என் கண்ணில் விழியாதே, ஓடிப் போ!" என்று பயமுறுத்தினார். அவருடைய மனதைச் சாந்தப்படுத்தி, சரோஜாவை மணந்து கொள்ள அவருடைய சம்மதத்தைப் பெறுவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது. முடிவில் அரைகுறை மனதோடு சம்மதித்தார்.

என் தாயாருக்கு ஒரே குதூகலம். முகத்தில் வெற்றிக் குறி ததும்ப, "நீ பத்திசாலிடா, தம்பீ! எனக்கு அப்பவே தெரியும் —சரோஜாவைத்தான் நீ பண்ணிக்குவே, அப்பாவுக்குப் பயந்துண்டிருக்கேன்னு. தம்பி! அவ ரொம்பக் கெட்டிக்காரின்னு கேள்வி. நீயுந்தான் பாரேன்; நீ நன்னாயிருக்கப் போறே! அப்போ சொல்வாய், உங்கப்பா!" என்று பெருமிதத்துடன் கூறி என்னை வாழ்த்தினாள். இதன் அந்தரங்கம் அவளுக்குத் தெரியாதல்லவா!

அவ்வளவுதான்; என் பெற்றோருக்கும் மாமாவுக்கு மிடையே கடிதங்கள் கை மாறின. கல்யாணத்திற்கு நாள் குறிப்பிடப் பட்டது. நல்லதொரு முகூர்த்தத்தில் சரோஜாவுக்கு மாலையிட்டேன்.

ஆனால், எத்தனை ஏமாற்றம்! என் தாயாரின் அழாக் குறையான வேண்டுகோளுக்

ிணங்கியும், உறவின் முறையில் வரன் இருக்க எல்லாப் பெண்களையும் அன்னியத்திலேயே சம்பந்தம் செய்விப்பது முறையல்ல என்ற அயலகத்தாரின் நிர்ப்பந்தத்திற்கு இணங்கியுமே இவ் விவாகம் நடைபெற்றிருக்கிறது—முக்கியமாய் சரோஜாவுக்கும் அவள் தாயாருக்கும் இந்தச் சம்பந்தத்தில் பூரணச் சம்மதமில்லை என்று அவர்களுடைய ஜாடையான பேச்சுக்களின்மூலம் அறிந்து நெஞ்சமுடைந்தேன். செல்வம், அந்தஸ்து இவற்றில் எங்கள் இரு குடும்பங்களுக்கு மிடையே யுள்ள ஏற்றத்தாழ்வே அவர்களுடைய அதிருப்திக்குக் காரணம் என்பது ஸ்பஷ்டமாக விளங்கிற்று. சமுதாயம் ஏற்படுத்திய இந்தப் பிளப்பை, அன்பெனும் பிணைப்பினால் இணைத்து விடலாம். அந்த அம்சம் என் புது மனைவியிடத்தில் காணப்பட்டிருந்தால் என் இல்லற வாழ்க்கை ஒருவாறு நிம்மதியாய்க் கழிந்திருக்கும். பூமியின் அடிப்பாகத்திலுள்ள நெருப்புக் குழம்பு கொதிப்படைந்தவுடன், கல், மண், தணல் இவற்றின் ரூபமாக எரிமலையாய்க் கொப்புளித்துத்தானே ஆகவேண்டும்! அவ்வாறே அவளுடைய மனக் கொதிப்பு—ஏழ்மைச் சம்பந்தம் என்ற மனக்குறை—அலட்சியம், இறுமாப்பு, பிடிவாதம் என்னும் குணங்களாகப் பரிணமித்தன.

எதற்கெடுத்தாலும் தன் அந்தஸ்தோடு என்னை எடை போட்டுக் காண்பிக்க அவள் முற்பட்டாள். மானமும், தன்னம்பிக்கையும் படைத்த எந்த ஆண் பிள்ளைதான் மனைவி தன்னைக் குறைத்துப் பேச மனம் ஒப்புவான்? அவளுடைய இத்தகைய நடத்தைகளால் என் உள்ளத்தில் புகைந்து கொண்டிருந்த சுயமரியாதையுணர்ச்சி பீறிட்டெழுந்தது. அவளுடைய தந்தையின் ஆதரவுக்குட்பட்டு பி. ஏ. க்குப் படித்துக் கொண்டிருந்த நான் அவளுடைய உதவிகளை உதறித் தள்ளினேன். தெய்வானுக்கிரகத்தால், சென்னையிலுள்ள பிரபலத் தொழிற்சாலையொன்றில் வேலைக்கமர்ந்து, என் மனைவியை அவளுடைய பிறந்தகத்தை விட்டுப் பிரித்தெடுத்துத் தனிக் குடித்தனம் வைத்தேன். ஆயினும், அவளுடைய குணத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. என் சம்பாத்தியத்தைக்கொண்டு அவளுடைய நவநாகரிகத் தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலாமல் விழித்தேன்.



அவள் பேரழகு படைத்தவள்தான்; சௌந்தரியமே உருவெடுத்தவள் என்று சொன்னாலும் மிகையாகாது. செயற்கை மலர்களும் அழகாய்த்தானிருக்கின்றன. எனினும், அவற்றைப் பூரணமாய்ச் சோபிக்கச் செய்யும் வாசனை அவற்றிற்கு இல்லாததால், வெறும் ஜோடனைகளுக்கு மட்டுமேயன்றி; தெய்வார்ச்சனை முதலிய புண்ணிய கைங்கரியங்களுக்கு அவை பயனற்றவைதானே! அதேமாதிரி குணவாசனையற்ற என் மனைவியின் பேரெழிலும் புனிதமான இல்லற வாழ்க்கைக்கு அல்ல; சதிர்க்கச்சேரி முதலிய கூத்தாட்டங்களுக்கு ஏற்றதுதான்!

இந்த லட்சணத்தில் நாட்கள் நடந்து சென்றன. யந்திரம்போல் வாழ்க்கை நடந்தது. சரோஜா கர்ப்பிணியானாள். அவள் சமீபத்தில் பெற்றெடுக்கப் போகும் குழந்தையைப் பற்றிச் சிந்திக்கும்போதெல்லாம், வறண்ட பாலைநிலத்தைக் கடக்கும் பிரயாணி ஒருவனுக்கு, நீரும் நிழலும் தரக்கூடிய பாலைவனச் சோலையொன்று கண்ணுக் கெட்டும் தூரத்தில் தென்படும்போது ஏற்படும் உற்சாகத்தைப் போன்ற ஒரு தெம்பு எனக்கு ஏற்படும். ஒருவேளை அந்தக் குழந்தை எங்கள் இருவருக்கு மிடையேயுள்ள மனவிகற்பத்தைப் போக்கி, வறட்சியுற்ற எங்கள் வாழ்க்கையை வளமுறச் செய்யலாமென்று மனந் தேறினேன்.

என் மனைவியை வளைகாப்பிற்கு அழைத்திருந்தார்கள், அவள் பெற்றோர். அந்த அழைப்பை நிராகரித்துவிட்டு ஊரிலிருந்த என் தாயாரை ஒத்தாசைக்கு வரவழைத்தேன். என் தாயார் வந்த சில நாட்களுக்குள்ளாகவே மாமிக்கும் மாட்டுப் பெண்ணுக்கும் சச்சரவுகள் ஆரம்பித்தன. என் மனைவி என்னைப் படுத்தினதோடு நில்லாமல், தகப்பனுடன் பிறந்தவளென்பதையும் மறந்து, என் தாயாரிடமும் அலக்ஷியமாக நடந்து கொண்டாள்.

சாதாரணமாய், மாட்டுப் பெண்ணை மாமி காய்வது போய், சரோஜா என் தாயார் மேல் எடுத்ததற்கெல்லாம் குற்றம் கற்பிக்க ஆரம்பித்தாள். தன் தந்தையின் செல்வத்தால் இறுமாப்படைந்திருந்த என் மனைவியின் கண்களுக்கு, என்



நாயுடு:— என் முதலியார்வாள்! சங்கீதக் கச்சேரிகளிலே உமக்கு எந்த பாகம் ரொம்பப் பிடிக்கிறது?

முதலியார்:— எனக்கு ரொம்பப் பிடிப்பது கச்சேரியின் பின் பாகம்தான்.

நாயுடு:— ஏன்?

முதலியார்:— அப்புறம் கச்சேரி வெகு சீக்கிரத்தில் முடிந்துவிடுகிறது பாருங்கள்!

---

தாயார் ஒரு சமையற்காரிபோல் தோன்றினாள். எங்கள் வீட்டிற்கு வரும் அவளுடைய உறவினரிடத்தில் என் தாயாரைத் தனது மாமி என்று ஒப்புக் கொள்ளவும் அவள் வெட்கினாள். இதைப்பற்றி ஒரு சமயம் என் தாயார் அவளிடம், "எண்டி! உன் சித்தியோடே மன்னி அன்றைக்கு என்னை யாருன்னு கேட்கிறப்போ, வெறுமனே எங்களுக்குத் தெரிஞ்சவாதான்னு சொன்னாயே? 'என்னோடே அத்தை'யின்னு சொல்லிட்டாக் குறைஞ்சிடுமோடி?" என்று கேட்டதற்கு, அவள் நிர்த்தாட்சண்யமாக, "ஆமாம், தெரிஞ்சவான்னு சொன்னதிலே இப்போ ஒண்ணும் குறைஞ்சிடல்லே! நானெல்லாம் உங்களைத் தெரிஞ்சிக்கணுமின்னு அவசியம் ஒண்ணுமில்லே! 'அத்தை' என்ன வேண்டிக் கிடக்கு, நீங்கள் இருக்கிற லக்ஷணத்திலே?" என்று உதாசீனமாகப் பேசிவிட்டாள்.

வேறொரு சந்தர்ப்பமாயிருந்தால், அடுத்த கண்டிக்கே என் தாயார் மூட்டை கட்டியிருப்பாள். பாவம், ருக்குவைப் படுத்தி வைத்த என் தாயாரின் ஜம்பம், தன் அண்ணாவின் பெண்ணிடம் பலிக்கவில்லை. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையுமல்லவா? இதைப் போலொத்த சந்தர்ப்பங்களில், "பதவிசுபோல வீட்டில் பெண்ணை வச்சிண்டு, அண்ணா பெண்ணாச்சேன்னு உன்னைக் கொண்டு என் பிள்ளை தலையிலே கட்டி வச்சேன், பாரு! என் புத்தியை சொர்துக்கணும்" என்று தன் செய்கைக்காக வருந்தி, ருக்குவைப் பாராட்டுவாள் என் தாயார்.

பிரசவ காலம் நெருங்கிற்று. என் மனைவிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது—நான் எண்ணியிருந்தது போல் எங்களை ஒற்றுமைப்படுத்த அல்ல; தெய்வ சங்கல்பம் வேறு விதமாக இருந்தது. எங்கள் வாழ்க்கை என்றுமே ஒன்றப் போவதில்லை என்பதை அறிந்தானோ என்னவோ—என் மனைவியை என்னிடமிருந்து சதா பிரித்தெடுத்துக் கொள்வதற்காகப் பகவான் அக்குழந்தையின் பிறப்பைப் பயன்படுத்திக் கொண்டார். பிரசவத்தின்போது ஏற்பட்ட அதிர்ச்சியால் ஜன்னி கண்டு, சரோஜா விண்ணுலகடைந்தாள்.

குழந்தையை என் தாயாரிடம் ஒப்படைத்து ஊருக்கு அனுப்பிவிட்டு, மயிலாப்பூரில் ஓர் அறை எடுத்துக் கொண்டு தனியாக என் நாட்களைக் கடத்தினேன்.

## 5

இந்நாட்களில் என் தனிமையைப் போக்கி என்னைத் தேற்ற வந்தவன்போல், எதிர்வீட்டுக் கிருஷ்ணமூர்த்தி என் நண்பனாக வாய்த்தான். என் வாழ்க்கையின் கசப்பான அநுபவங்களையெல்லாம் ஒவ்வொன்றாய் அவனிடம் ஒப்புவிக்கும்போது என் நெஞ்சின் பாரம் சற்றுக் குறைவதைப் போன்றதொரு பிரமை எனக்குத் தட்டுவதுண்டு. ஆம், வாழ்க்கையின் இன்ப துன்பங்களைப் பிறரோடு பங்கிட்டுக் கொள்ளும்போது நிஜமாகவே நம் இன்பங்கள் பன்மடங்கு அதிகரிப்பதோடு துன்பத்தின் பளுவும் குறைந்து மனச்சாந்தி ஏற்படுகிறது.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் ஓய்வு எடுத்துக் கொள்வதற்காக லீவில் ஊருக்கு வந்திருந்தேன். லீவு முடிய இன்னும் இரண்டு தினங்களேயிருந்தன. மறு நாள் சென்னைக்குக் கிளம்ப வேண்டும். வரும்போது வாங்கி வந்திருந்த ரயில்வே கால அட்டவணைப் புத்தகத்தில், எப்போதெல்லாம் சென்னைக்கு வண்டி இருக்கிறதென்று பார்க்க விரும்பினேன். புத்தகம் ஓர் இடத்திலும் காணப்படவில்லை.

"அப்பா நேத்திக்கி பார்த்துண்டிருந்தார். புஸ்தக அலமாரியில் இருந்தாலு மிருக்கும், தேடிப் பார்!" என்று என் தாயார் சொன்னாள். அலமாரியிலுள்ள ஒவ்வொரு தட்டையும் பார்த்தேன். அப்போது ஒரு புத்தகத்திற்குள்ளிருந்து ருக்மிணிக்கு விலாசமிடப்பட்ட உறை ஒன்று கீழே விழுந்தது. அவளுடைய காதலன் அவளுக்கு எழுதிய கடிதமாக இருக்குமோவென்ற சந்தேகம் தோன்றவே கடிதத்தைப் பிரித்து நோக்கினேன்.

என்ன ஆச்சரியம்! சென்னையிலுள்ள என் நண்பன் கிருஷ்ணமூர்த்தியின் மனைவி எழுதியிருந்தாள். 'அவளை எங்கே ஸ்நேகம் பிடித்தாள் இவள்?' என்று எண்ணியவாறே கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தேன். ஆ! என் ஆனந்தத்தை எப்படி விவரிப்பது? என் கால் தரையில் பாவவில்லை; ஏதோ ஒரு இன்ப லோகத்திற்கு எடுத்துச் செல்லப் படுவதைப் போன்றதொரு உணர்ச்சி! என் சப்தகோடி நரம்புகளிலும் மின்சாரம் பாய்வது போன்ற ஒரு புதுத் தெம்பு! என் எதிர்காலத்தைப் பற்றிய தேஜோமயமான ஒரு கனவு! இவை யாவும் அக்கடிதத்தில் நான் கண்டறிந்த விஷயங்களால் இமைப் பொழுதில் ஏற்பட்டன வென்றால் அவ்வளவிற்கு இன்பமளிக்கக்கூடிய செய்திதான் என்னவென்று அறிய நீங்கள் விரும்புகிறீர்கள் அல்லவா?

என் அன்புள்ள ருக்கு!

கடந்த இரண்டு மாதங்களாக உனக்குக் கடிதம் எழுத முடியாமற் போனதற்காக வருந்துகிறேன். வீட்டுத் தொல்லைகளினாலும், பாப்பாவின் சுகவீனத்தினாலுமே எழுதப் பிந்திவிட்டது. வருத்தப்பட்டுக் கொள்ளாதே!

முந்தின கடிதத்தில், எங்கள் எதிர்வீட்டு மாடிக்கு ஒருவர் குடி வந்திருப்பதாகவும், எங்களவருக்கும் அவருக்கும் நட்பு ஏற்பட்டிருக்கிறதென்றும் எழுதியிருந்தேனல்லவா? இப்போதெல்லாம் 'அவர்' என்னுடன் கூட அதிகம் தங்குவதில்லை. ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாய்த் தன் நண்பருடன் அரட்டை யடிக்க ஓடிவிடுகிறார். 'அப்படி இரவு பத்து மணி வரைக்கும் பேசுவதற்கு அவர்களுக்குள் என்னதான் இரகசியமிருக்குமோ!' என்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆனால், என்ன ஆச்சரியம்! அவர் வேறு ஒருவருமல்ல; நீ உயிரையே வைத்திருக்கும் சாக்ஷாத் உன் அத்தானேதான் என்பதை நேற்றுதான் கேள்விப்பட்டேன். உடனே உன் இரகசியத்தை — அதுதான், சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன், வேறொருவரை நீ காதலிப்பதாக உன் அத்தான் உணர்ந்தால்தான், தனவந்தரான அவருடைய மாமனின் பெண்ணை அவர் மணப்பதற்கும், அந்தச் சம்பந்தத்தின் மூலம் அவருடைய எதிர்கால வாழ்வு சோபித மடைவதற்கும் ஏதுவாயிருக்குமென்று உத்தேசித்து, நீ அவர்மேல் கொண்டிருந்த பிரேமையை மறைப்பதற்காக, கற்பனைக் கடிதமொன்று சிருஷ்டித்து அக் கடிதம் அவரிடம் சிக்கும்படி செய்தாயே, அந்தச் சம்பவத்தை எங்களவர் மூலம் அவருக்குத் தெரிவித்துவிட வேண்டுமென்று என் மனம் துடியாய்த் துடித்தது. என்றாலும், உன்னிடமும் ஒரு வார்த்தை கேட்டுக் கொள்வோமே என்று எண்ணி இக் கடிதத்தை எழுதுகிறேன்.

என் அருமை ருக்கு! உன் அத்தானிடம் உனக்குள்ள காதலின் ஆழத்தை அப்போது நான் சரியாக அறிந்திருந்தால், உன் அசட்டுத்தனமான செய்கையினின்றும் உன்னைத் தடுத்திருப்பேன். ஏதோ அவரைத் தட்டிக் கழிப்பதற்காக அந்த யுக்தி செய்கிறாயென்று நினைத்தேன். அப்போது நாமிருவரும் நன்றாகப் பழகிக் கொள்ளவில்லை யல்லவா? பரஸ்பரம் நெருங்கிப் பழகின பின்புதானே உன் உத்தம குணங்களையும், நீ உன் அத்தானிடம் கொண்டுள்ள ஆத்மீகக் காதலையும் என்னால் அறிய முடிந்தது?

அவருடைய நல்வாழ்விற்காக உன் வாழ்க்கையையே பாழ்படுத்திக் கொண்டாயே—

---




பாட்டி:—பெண்ணைப் பார்த்து விட்டுப் போனானே, அந்தப் பிள்ளையாண்டான் என்ன எழுதியிருக்கிறான்? கொஞ்சம் படித்துக் காட்டேடா, அப்பா!

பேரன்:—படிக்கிறேன் கேளு, பாட்டி! 'லலிதாவின் பாட்டு ரொம்ப பிகுவோடு இருந்தது. சாரீரம் நடுத்தரம். கமகப் பொழிவும், ஸ்வர ஜாதியும் ரொம்ப மெச்சத் தகுந்தவையா யிருந்தன. மொத்தத்தில் முன்னுக்கு வரவேண்டிய ஒரு புள்ளி என்றே சொல்லலாம்......'

பாட்டி:—எந்தபடி 'பெண் பிடிச்சிருக்கு'ன்னு ஒரு வார்த்தை எழுதவில்லையே!— எல்லாம் வெறும் பத்திரிகை விமர்சனமான்னா எழுதியிருக்கான்!

பேரன்:—நான்தான் பிள்ளையாண்டான் ஒரு பத்திரிகை ஆபீஸிலே ரேடியோ விமர்சகனா யிருந்து வேலை பார்க்கிறான்னு அப்பவே சொன்னேனே!

இப்போது அவருடைய நிலைமை என்ன, தெரியுமா? இனி அவர் கல்யாணமே செய்து கொள்ளப் போவதில்லையாம். காரணம், அவருடைய முதல் மனைவி ரொம்பப் பொல்லாதவள் என்பதுதானாம்! இந்த ஆண்கள் நம் இனத்தவரைப் பற்றி எவ்வளவு சீக்கிரம் தப்பபிப்பிராயம் கொண்டு விடுகிறார்கள், பார்த்தாயா? அவள் ஒருத்தி 'ராங்கிக்காரி'யாக இருந்தால், எல்லோரும் அவளைப் போலவே இருப்பார்கள் என்று அர்த்தமா, என்ன? நீ அவர்மேல் கொண்ட பிரேமையை மறைத்ததனால் அல்லவா, சரோஜாவை மணந்து அவளுடைய நடத்தையினால் மனமுடைந்து தாம்பத்ய வாழ்க்கையையே கண்டு நடுங்க வேண்டிய நிலைமை அவருக்கு ஏற்பட்டு விட்டது? போனது போகட்டும்; இனியாவது அவரை மணந்து அவருடைய வாழ்வைச் சாபல்யமடையச் செய்.

உன் வளர்ப்புக் குழந்தை சந்துரு எப்படியிருக்கிறான்? உன் அத்தான் இரண்டொரு தினங்களில் லீவில் அங்கு வருவதாகப் பிரஸ்தாபம். சந்தர்ப்பத்தை நழுவ விடாதே!

உங்கள் யாவருடைய க்ஷேமத்திற்கும் உடனே பதில் எழுது.

உன் அன்பை மறவாத,

**கமலா கிருஷ்ணமூர்த்தி.**

கமலாவின் இக் கடிதத்தின் மூலம், ருக்மிணி என்னைத் தவிர வேறு யாரையும் காதலிக்கவில்லை யென்றும், முன்பு என் கையில் சிக்கிய கடிதம், நான் சரோஜாவை மணந்து சுகவாழ்வடையும் பொருட்டு, ருக்குவினால் கற்பனை செய்யப்பட்ட தென்றும் அறியவே, என் விழிக் கடைகளினின்றும் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தது. 'இத்தகைய தியாகம் செய்வதென்றால் என்னை அவள் எவ்வளவு தூரம் நேசித்திருக்க வேண்டும்?' என்று நினைக்க நினைக்க நான் அவள் மேல் கொண்டிருந்த காதல் உச்ச நிலையை அடைந்தது. என் உள்ளத்தில் பொங்கியெழுந்த உணர்ச்சிகளை யெல்லாம் அவளிடம் வாய்விட்டுக் கூறி, அவளுடைய அர்த்தாக்கமான தெய்வீகக் காதலைச் சரிவர அறிந்து கொள்ளாததற்காக அவளிடம் மன்னிப்புக் கோர வேண்டுமென்று என் உள்ளம் துடித்தது. தனிமையில் அவளைச் சந்தித்துப் பேசுவதற்குச் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கியிருந்தேன்; சமயமும் வாய்த்தது.

அன்று இரவு ஏழு மணி இருக்கும். வெண்ணிலவு தன் அமுதகிரணங்களை வஞ்சனையின்றி உலகிற்கு வாரி யிறைத்துக் கொண்டிருந்தது. மாடியில் சந்துருவுக்குப் பால் புகட்டிக் கொண்டிருந்தாள், ருக்கு. அன்று வெள்ளிக்கிழமையாதலால் என் தாயார் சுவாமி தரிசனம் செய்யக் கோவிலுக்குப் போய்விட்டாள். அப்பாவும் வீட்டிலில்லை. என் இதய தேவதையைத் தரிசித்துப் பேசுவதற்காக மாடியை அடைந்தேன்.

எதிர்பாராத விதமாய் என்னை அங்கே கண்டதும் ஒரு கணம் அவள் திகைத்துப் போனாள். அவளுடைய கண்களில் மிரட்சியும் கலவரமும் காணப்பட்டன. லஜ்ஜையுடன் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

"ருக்கு! என் கண்ணே!" என்ற வார்த்தைகள் என்னையும் மீறி என் வாயினின்றும் வெளிப்பட்டன.

என்னிடம் தனித்து நிற்கச் சங்கோஜப்பட்டோ—அல்லது அசம்பாவிதமான என் வார்த்தைகளைக் கேட்டு அஞ்சியோ, கீழே இறங்க யத்தனித்தாள். கட்டு மீறிய என் ஆசையை யெல்லாம் உடனே அவளிடம் கட்டவிழ்த்து விடாவிட்டால் என் உள்ளமே வெடித்து விடும்போ லிருந்தது. உடனே அவளைத் தடுத்து நிறுத்தி, "எத்தனை நாளைக்குத்தான் உன் உள்ளத்தை எனக்குத் திறந்து காட்டாமல் இருக்கப் போகிறாய், ருக்கு? எனக்கு எல்லாம் தெரிந்து போச்சு!" என்று ஆரம்பித்தேன்.



"எதைத் தெரிந்து கொண்டீர்கள்?" என்று கேட்கும் பாவனையில் என்னை நிமிர்ந்து நோக்கினாள்.

கமலாவின் கடிதத்தை அவளிடம் கொடுத்தேன். தன்னுடைய 'திருவிளையாடலை' அக்கடிதம் எனக்கு அம்பலப்படுத்தி விட்டதென்பதைப் புரிந்து கொண்ட அவள் நாணத்

றுடன் தலை குனிந்தாள். அவளுடைய இதழ்களின் ஓரங்களினின்று குறும்பும் கூச்சமும் கலந்த மோகனப் புன்னகையொன்று அரும்பியது. கவர்ச்சி மிக்க அந்தப் புன்முறுவல் என்னை அவள் இதய பீடத்திற்குள் வரவேற்பது போலிருந்தது.

உணர்ச்சி வசப்பட்ட நான், "நல்ல விளையாட்டு, ருக்கு! விளையாடுவதற்கும் இடம், பொருள் என்று ஒன்றுமே கிடையாதா, என்ன? உன் கற்பனைக் கடிதத்தைப் பார்க்கும் நிமிஷம் வரை உன் மேல் நான் உயிரையே வைத்திருந்தேன். என் உள்ளக் கிளர்ச்சிகளை உன்னிடம் வெளியிடுவதற்கு எத்தனையோ தடவை முயன்றேன். உன்னுடைய அசட்டுச் சங்கோஜம்தான் அதற்கு இடம் கொடுக்கவில்லையே! இந் நிலையில் உன் உள்ளத்தில் உள்ளதை நான் எப்படி அறிய முடியும்? அதற்கேற்றாற்போல் அந்தக் 'காதல் கடிதம்' வேறு என் ஆசையில் இடி விழச் செய்தது. வேறு வழியின்றி சரோஜாவைக் கல்யாணம் பண்ணிக் கொண்டேன். உன் 'அசட்டுத் திருவிளையாடல்' என்னை என்னவெல்லாம் செய்து விட்டது, போ!" என்று சொல்லி, நான் பொய்க் கோபத்தை வருவித்துக் கொண்டேன்.

முதன் முதலாகத் தன் சங்கோஜத் திரையினின்றும் விடுபட்டுக் கொண்டு, "என் மேல் கோபமா?" என்று அன்பும் பச்சாதாபமும் கலந்த குரலில் கேட்டாள் ருக்கு.

'தியாகமே உருவெடுத்த உன்னைக் கோபிப்பதற்குப் பைத்தியமா, எனக்கு?' என்று மனத்துள் எண்ணிக் கொண்டு, வெளிப்படையாய், "ஏன் இல்லை? இத்தனை கஷ்டங்களுக்கும் காரணமாக இருந்த உனக்கு என்ன தண்டனை கொடுப்பதென்றுதான் தோன்றவில்லை!" என்றேன்.

"தண்டனையா? அதுதான் முன்பே கொடுத்துவிட்டேனே! ஒரு வருஷமாய் இந்த 'வாண்டுப் பய'லுக்குச் சவாப்புக் கொடுக்கிறேனே, போதாதா? — இல்லையாடா, கண்ணு? சொல்லேன், உங்கப்பாகிட்ட!" என்று கொஞ்சலும் சிரிப்புமாகச் சொல்லிக் கொண்டே, தன்னிடமிருந்த சந்துருவை என்னிடம் கொடுத்தாள்.

சந்துரு என்னிடம் இருக்கப் பிடிக்காமல் ருக்குவைச் சுட்டிக் காட்டிக் கொண்டு, "அப்ப, அப்ப! அம்மா; அப்ப, அப்ப! அம்மா!" என்று கதறிய வண்ணம் அவளிடம் போக முயன்றான்.




"ஓ, போக்கிரி! நான் உனக்கு அம்மாவாடா? திருட்டுக் கழுதை!" என்று செல்லமாய் அவனுடைய கன்னத்தை நிமிண்டி விட்டு, அவனை என்னிடமிருந்து வாங்கி, கண்ணீர் வழிந்திருந்த அவனுடைய இரு கன்னங்களும் சிவக்க முத்த மாரி பெய்தாள்.

"சந்தேகமென்ன? நீதான் இனி சந்துருவுக்கு அம்மா!" என்றேன்.

"ஊஹூம்! இந்தப் போக்கிரி என்னை என்னென்ன பாடெல்லாம் படுத்துகிறான், தெரியுமா? இங்கே பாருங்கள், புடவை முழுவதும் பன்னீர் தெளிச்சுட்டான்!" என்று பிணங்கிக் கொண்டே, நனைந்திருந்த புடவையைப் பிழிந்தாள்.

"ஆமாம், நாம் கல்யாணம் பண்ணிக்கப் போறோமோன்னோ? மங்களாபிஷேகம் பண்றான்!" என்று கேலியாக நான் சொல்லி முடிப்பதற்குள், "போங்கோ, அத்தான்! உங்களுக்கு வெட்கமே இல்லை!" என்று நாணம் ததும்பக் கூறி விட்டு அவள் அப்பால் நகர்ந்தாள். அதே சமயத்தில் கோவிலிலிருந்து திரும்பிய என் தாயார், "ருக்கு!" என்று அவளைக் கூப்பிட்டுக் கொண்டே வந்தாள்.

அப்புறம் கேட்கவா வேண்டும்? இன்னும் ஒரு மாத லீவு வேண்டுமென்பதற்காக ஆபீஸுக்குத் தபாலில் கடிதம் பறந்தது. திருமண அழைப்பிதழ் அச்சிலேறியது. இருவரும் பரஸ்பரம் மலர்மாலை சூடி மகிழ்ந்தோம். என் இரு கண்மணிகளுடன் — ருக்குவும், சந்துருவும் — நான் ஒரு மாதங்கழித்து சென்னைக்குத் திரும்பினேன். சரோஜா அணைத்துவிட்டுச் சென்ற என் வாழ்க்கைத் தீபத்தை ருக்கு மீண்டும் ஏற்றி வைத்தாள்.



# பச்சை விளக்கு

பி.எஸ்.மணி

ஒரு காட்டில் ஒரு மந்திரவாதி இருந்தான். அவன் எல்லோரும் தன்னைக் கண்டு பயந்து மரியாதை செய்ய வேண்டும் என்று எண்ணினான். அவ்வாறு பணியாதவர்களைத் தன் மந்திர ஜால வித்தைகளினால் அவன் பயமுறுத்தி வந்தான்.

மந்திரவாதியைக் கண்டு பயப்படாதவர்களில் அந்தக் காட்டிலே வசித்து வந்த ராட்சதனும் ஒருவன். நீண்ட மூக்கும், பருத்த தேகமும், கோரப் பற்களும் அவனை ராட்சதனென்று ஊர்ஜிதப் படுத்தின. ஆனால் மற்ற ராட்சதர்களைப்போல் அவனுக்கு மனிதர்களைக் கொன்று தின்னும் பழக்கம் கிடையாது. காட்டில் கிடைத்த கனிவர்க்கங்களையே அவன் புசித்து வந்தான்,

அந்தக் காட்டில் பல வேடர்கள் வசித்து வந்தார்கள். அவர்களுக்கு நிறையக் குழந்தைகள் உண்டு. அவ்வேடச் சிறுவர்கள் ஒரு நாள் காட்டில் ஆனந்தமாக ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் சென்றார்கள். அவர்கள் போகும் வழியில் ஓர் அரண்மனை எதிர்ப்பட்டது. அங்கே பலவகை பழ மரங்களும், திராட்சைக் கொடிகளும் செழித்து வளர்ந்திருந்தன. கனி வர்க்கங்களைக் கண்டதும் சிறுவர்களின் நாக்கில் ஜலம் ஊறிற்று. உடனே அவர்கள் அரண்மனைக்குள் நுழைந்து பழங்களைப் பறித்துத் தின்ன ஆரம்பித்து விட்டார்கள்.

அந்த அரண்மனை யாருடையது தெரியுமா? ராட்சதனின் அரண்மனைதான் அது. அடிக்கடி அந்த அரண்மனைக்குள் சிறுவர்கள் சென்று வந்தனர். ராட்சதன் ஒன்றும் செய்யாதிருக்கவே அவர்கள் நாளடைவில் அவனருகில் நின்று விளையாடவும் ஆரம்பித்தார்கள். சிறுவர்களில் ஒருவன் அந்த ராட்சதன் தூங்கிக்கொண்டிருக்கும் போது மூக்கைப் பிடித்து இழுப்பான்; மற்றொருவன் காதைப் பிடித்துத் திருகிவிட்டுச் சிரிப்பான். ராட்சதன் பொறுமை யிழந்து எழுந்ததும் அந்தச் சிறுவர்கள் ஒன்றுமறியாதவர்கள் போல் ஓடி விடுவார்கள்.

அந்தச் சிறுவர்களின் கள்ளங்கபடமற்ற மனத்தையும், பால் வடியும் முகத்தையும் கண்ட ராட்சதனுக்கு அவர்களை நேரிடையாகத் துன்புறுத்த மனம் வரவில்லை. ஆகவே, அவர்களைத் தந்திரமாக அழைத்து, நன்றாகப் பயமுறுத்தி அனுப்ப வேண்டும் என்று நினைத்தான். அதற்காகப் பல வழிகளையும் கையாண்டு பார்த்தான். ஒன்றும் பயனில்லாமற் போகவே, மந்திரவாதியிடம் சென்று ஏதாவது யோசனை கேட்பது என்ற முடிவுக்கு வந்தான்.

மறுநாள் காலையில் எழுந்ததும் ராட்சதன் மந்திரவாதியிடம் சென்றான். ராட்சதனைக் கண்டதும், “என்ன வேண்டும்?” என்று கேட்டான் மந்திரவாதி.

ராட்சதன் தயக்கத்துடன் தனது விருப்பத்தைத் தெரிவித்தான்.

"சரி, இவனுக்குப் பாடம் கற்பிக்க நல்ல சமயம் வாய்த்தது!" என்று தன் மனதிற்குள் சந்தோஷப்பட்டுக் கொண்ட மந்திரவாதி, உடனே ஒரு பெட்டியையும் பச்சை விளக்கையும் எடுத்து அவனிடம் கொடுத்து, "ராட்சதனே! நீ இந்தப் பெட்டியைத் திறந்து பச்சை விளக்கை ஏற்றி வைத்துப் பார். அதன் மூலம் உன் ஆசை பூர்த்தியாகும்" என்றான்.

ராட்சதன் அந்தப் பெட்டியையும் பச்சை விளக்கையும் சந்தோஷத்துடன் பெற்றுக்கொண்டு திரும்பினான். அன்றிரவு தன் அறைக்குள் சென்று பச்சை விளக்கை ஏற்றிக் கொண்டு பெட்டியைத் திறந்தான். அவ்வளவுதான்; 'ஹோ' வென்று அலறி விட்டான் ராட்சதன். அதற்குப் பிறகு அவன் அந்த அறைக்குள் நுழையவே யில்லை.

மறுநாள் காலையில் வழக்கம்போல் சிறுவர்கள் அவன் இருக்குமிடத்திற்கு விளையாட வந்தார்கள். தன்னைப் பயமுறுத்திய அந்தப் பெட்டியைக் கண்டால் சிறுவர்களும் கட்டாயம் பயந்து ஓடி விடுவார்கள் என்று நினைத்த ராட்சதன், அவர்களை மந்திரப் பெட்டி இருந்த அறைக்கு அழைத்துச் சென்றான்.

என்ன ஆச்சரியம்! சிறுவர்கள் அந்தப் பெட்டியையும் பச்சை விளக்கையும் பார்த்த பிறகும் சிறிதும் பயப்படாமல் அந்த அறைக்குள்ளேயே நின்று கொண்டிருந்தார்கள்!

ராட்சதனுக்கு ஒன்றும் புரியவில்லை. "அந்தப் பெட்டிக்குள் ஒன்றும் இல்லையா?" என்று சிறுவர்களை நோக்கிக் கேட்டான்.

"என்ன இருக்கிறது, ஒன்றும் இல்லையே!" என்றார்கள் சிறுவர்கள்.

"அதிலிருந்து ஒரு பெரிய பூதம் தோன்றி உங்களைப் பயமுறுத்தவில்லையா?"

"பூதமாவது, கீதமாவது! அதெல்லாம் ஒன்றும் இல்லவே யில்லை!"

"நிஜமாகவா சொல்கிறீர்கள்?" என்று சந்தேகத்துடன் கேட்டுக் கொண்டே, ராட்சதன் பெட்டிக்குள் குனிந்து பார்த்தான். பார்த்ததுதான் தாமதம்; அவன் மீண்டும் 'ஹோ' என்று அலறிக்கொண்டே எடுத்தான் ஓட்டம்.

சிறுவர்களுக்குப் பொங்கி வந்த சிரிப்பை அடக்க முடியவில்லை. ஏன் தெரியுமா? அந்த மந்திரவாதியின் பெட்டிக்குள் பூதமும் இல்லை, ஒன்றும் இல்லை; அதற்குப் பதிலாக அதில் ஒரு கண்ணாடிதான் பொருத்தி வைக்கப்பட்டிருந்தது. அதில் தன்னைத்தானே பார்த்து விட்டுத்தான் அந்தப் பயங்கொள்ளி ராட்சதன் அப்படி அலறிக் கொண்டு ஓடினான்!

"இதற்கு முன் இந்த ராட்சதன் கண்ணாடியில் தன் முகத்தையே பார்த்திருக்கமாட்டான் போலிருக்கிறது!" என்றான் அந்தச் சிறுவர்களில் ஒருவன்.

"பார்த்திருந்தால் நம்மை ஓட வைப்பதற்குப் பதிலாக அவனே இப்படி ஓடியிருப்பானா?" என்றார்கள் அவன் தோழர்கள்.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அந்த ராட்சதனைக் காட்டில் காணோம்.





# கடனும் கதையும்

எஸ்.வி.எஸ்

அன்றைக்கொரு நாள் மாம்பலம் பஸ் ஸ்டாண்டில் நின்றுகொண்டிருந்தேன். அங்கிருந்து கொஞ்ச தூரத்தில் ஒரு தண்ணீர்த் தொட்டியிருந்தது. அதில் 'ஸ்ரீ கோவிந்தராஜன் தர்ம கைங்கர்யம்' என்று பொறித்திருந்தது. அந்தத் தொட்டி நிறையத் தண்ணீரும் ததும்பிக்கொண்டிருந்தது. வெய்யில் வேளையில் அதைப் பார்க்க வெகு அழகாக இருந்தது. இரண்டு குதிரை வண்டிகளின் குதிரைகள் தொட்டியில் தண்ணீர் அருந்திக் கொண்டிருந்தன.

எனக்கு அடுத்தாற்போல் ஒருவர் நின்றுகொண்டிருந்தார். அவரிடம் "இங்கே தண்ணீர்த்தொட்டியை வைத்தது பெரிய பேருகாரம்" என்றேன்.

"இந்த உபகாரம் இங்கே ஏற்பட்டது ஒரு விந்தையான கதை!" என்றார் அவர். "அது என்ன?" என்றேன்.

"அது எதற்கு? விட்டுத் தள்ளுங்கள்" என்று ரொம்பவும் அலுத்துக் கொண்டே சொன்னார்.

"பஸ் வர நேரமாகும் போலிருக்கிறது. கதையாயினும் சொல்லுங்கள் பொழுது போகும்" என்றேன். அவர் கொஞ்ச நேரம் கழித்து "என் நண்பன் அழகேசனுக்கு ஒரு நாள் இரவு படுக்கப் போகுமுன் தன் உயிர் மேல் அளவு கடந்த வெறுப்பு உண்டாயிற்று. உயிர் வாழ்வதைவிட இறந்துவிடுவதே மேல் என்று எண்ணினான். மறுநாள் காலைப் பத்திரிகையைப் பார்த்தான். அவன் இறந்துவிட்டதாக அதில் போட்டிருந்தது! அதைப் பார்த்து அவனே ஆச்சரியத்தால் திக்குமுக்காடிப் போனான்" என்று ஆரம்பித்தார். பிறகு அவர் கூறியதை என் பாஷையில் கூறுகிறேன்.

* * *

முதல் நாள் இரவு அழகேசனுக்குத் தன் உயிர் மேல் வெறுப்புண்டானதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. படுத்தவாறே மாதம் பிறந்தால் தனக்கு எவ்வளவு சம்பளம் வரும், கடன்காரர்கள் எத்தனைபேர் வாசலில் வந்து நிற்பார்கள் என்று எண்ணிப் பார்த்தான். வருமானம் கடுகாகவும் கடன் மலைபோலவும் தோன்றியது. இதை எப்படிச் சமாளிப்பது? ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான பதில் அல்லவா சொல்லிச் சமாளிக்க வேண்டும்? அதற்குக் காளிதாஸனுடைய கற்பனா சக்தியும் கம்பனுடைய கற்பனா சக்தியும் இருந்தால் அல்லவா சமாளிக்க முடியும்? பாவம், அழகேசன் என்ன செய்வான்?

கடன் கொடுத்து விட்டுத் திருப்பிக்கேட்கும் கடன்காரர்களைவிட கேட்காமல் வாய் மூடி மௌனியாக இருக்கும் கடன்காரர்கள் தான் மனதுக்கு ரொம்பவும் வேதனை அளிப்பவர்கள். கோவிந்தராஜனைப் பற்றிய நினைவு வந்ததும், அழகேசனுடைய மனக் கஷ்டம் அளவு கடந்ததாகி விட்டது. அப்போதுதான் அவனுக்குத் தான் உயிர் வாழ்வதை விட உயிர் விடுவதே மேல் என்று தோன்றியது.

மதுரையில் வசிக்கும் கோவிந்தராஜன் அழகேசனுக்கு ஒருசமயம் இருநூறு ரூபாய் கடன் கொடுத்திருந்தான். அதை இரண்டு மாதத்தில் திருப்பிக் கொடுத்து விடுவதாக வாங்கிக்கொண்டு வந்திருந்தான் அழகேசன். ஆனால் வருஷம் இரண்டாகியும், அழகேசன் திருப்பிக் கொடுத்த பாடாக இல்லை. கோவிந்தராஜனும் அதைப்பற்றிக் கேட்கவே இல்லை. இதைப்பற்றி நினைத்தபோது தான் அழகேசனுக்கு உயிரை விட்டுவிட வேண்டும்போல் தோன்றியது.

இவ்வாறு எண்ணிக்கொண்டே அன்றிரவு தூங்கிவிட்டான். மறுநாள் பொழுது விடிந்து எழுந்திருந்து காலைப் பத்திரிகையைப் பார்த்தான்.

வடமதுரைக்கு அருகில் ரயில் விபத்து

மூப்பது பேர் மாண்டனர்

நாலு பேருக்கு பலத்த காயம்

என்று கொட்டை எழுத்தில் பிரசுரித்திருந்தது.

முழு விபரத்தையும் படித்தான். அப்பொழுதுதான் அந்த ஆச்சரியமான விஷயம் அவனுக்குத் தெரிய வந்தது.

இறந்துபோனவர்கள் ஜாபிதாவில் 'அழகேசன், 78, ரங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை' என்று பிரசுரித்திருந்தது!

அவனுக்கு நம்ப முடியவில்லை. எதை? தான் உயிரோடு இருப்பதைத்தான்! ஏனெனில் அவனுக்குப் பத்திரிகைப் புளுகுகளில் அசாத்திய நம்பிக்கை!

'வந்தவிதமான சந்தர்ப்பத்தையும் தனக்குப் பிரயோசனமாகத் திருப்பிக் கொள்பவனே புத்திசாலி' என்று ஏதோ ஒரு வேதம் கூறியிருப்பதால் அழகேசனும் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தான். 'உலகம் தன்னை இறந்துவிட்டதாக எண்ணும். அதற்கேற்ப, கண்ணுக்குத் தெரியாத சீமைக்கு ஓடி விட்டால், கடன்காரர்கள் உபத்திரவத்தி

லிருந்து தப்பித்துக் கொள்ளலாம் அல்லவா?' என்று எண்ணினான். அதற்குப் பூர்வாங்கமாக அன்று முழுவதும் எங்கேயாகிலும் தலை மறைவாக இருக்கத் தீர்மானித்து, காலையிலேயே அறையை விட்டு வெளியே புறப்பட்டு விட்டான்.

அன்று மத்தியான மெல்லாம் யோசித்ததில் அழகேசனுக்குத் தான் செய்யும் காரியம் அவ்வளவு உத்தமமானதாகத் தெரியவில்லை. நேற்று சாயங்காலம்வரை தன்னுடன் அரட்டை யடித்துக் கொண்டிருந்த முருகேசன் இந்தச் சம்பவத்தை எப்படி நம்புவான்? நேற்று ராத்திரி மட்கடையில் பில்கொடுத்து கொசித்துக் கொண்டிருந்த போது பார்த்த மாணிக்கம் ரயில் விபத்தில் அழகேசன் இறந்து விட்டதை எப்படி நம்புவான்? இவ்விதம் அவன் இறந்து விட்டதை நம்ப முடியாதவர்கள் ஜாபிதா எடுத்தபோல இருபது பேருக்கு மேலிருந்தார்கள். ஆகவே, கண்ணுக்குத் தெரியாத சீமைக்கு ஓடிப்போகும் எண்ணத்தைக் கைவிட்டு, அன்று சாயங்காலம் அவன் தன்னுடைய அறைக்குத் திரும்பி வந்தான்.

அறையில் நுழைந்ததும், ஒரு தபால் 'கவர்' கீழே கிடப்பதைப் பார்த்தான். அதை ஆவலுடன் பிரித்தான்.

மதுரை.

............

அன்புள்ள அழகேசனுக்கு,

உன்னுடைய விலாசம் கேட்காமல் இந்தக் கடனை நான் தவிர்க்கிறேன். [illegible] நான் [illegible] என் பழைய டைரியைப் பார்த்த போதுதான் உன் விலாசம் தெரிந்தது. நான் இன்றிரவு புறப்பட்டு, திருச்சியில் ஒரு நாள் தங்கிவிட்டு, அதற்கு மறுநாள் அங்கே வந்து சேருகிறேன். உன்னுடைய விலாசம் மறுபடியும் மறந்து விடுமோ என்று பயந்தேன். உன் விலாசத்தைக் குறித்த காகிதத் துண்டு களை என் நோட்டுப் [illegible] போட்டு வைத்துக் கொள்ளப் போகிறேன். என் ஞாபக மறதிதான் உனக்குத் தெரிந்ததா வித்தே! மற்றவை நேரில்.

இப்படிக்கு,
கோவிந்தராஜன்.

அந்தக் கடிதத்தைப் படித்ததும், அழகேசனுக்கு மனசு ரொம்பவும் இளகிவிட்டது. இருட்டறையில் 'டார்ச்' விளக்குப் போட்டாற் போல் விஷயமும் பளிச் சென்று விளங்கி விட்டது.

கோவிந்தராஜன் புறப்பட்ட அன்றுதான் வட மதுரைக் கருகில் ரயில் விபத்து நேர்ந்திருக்கிறது. விபத்தில் உயிர் துறந்தவர்களில் கோவிந்தராஜனும் ஒருவனாக

# காலேஜில் என்ன?



கணபதி:—டேய் கிட்டு! நேத்திக்கு நீ காலேஜுக்கு வராமல் போய் விட்டையே; அடாடா...!

கிட்டு:—என்னடா, ஏதேனும் முக்கியமான பாடம் நடந்து விட்டதா?

கணபதி:—பாடம் கிடக்குடா! நம்ம காலேஜ் காண்டீனில் பேஷான உருளைக்கிழங்கு போண்டாவும் பாதாம் ஹல்வாவும் போட்டிருந்தான். எப்படி யிருந்தது, தெரியுமா!

---

இருக்கவேண்டும். அவன் பைக்குள் அழகேசன் விலாசமிருக்கவே, அவனை அழகேசன் என்று நினைத்துக் கொண்டு பத்திரிகையில் போட்டு விட்டார்கள்.

இதை அறிந்ததும் அழகேசன் அடைந்த வருத்தம் கொஞ்ச நஞ்ச மல்ல. தன்னைப் பார்க்க வேண்டும் என்று புறப்பட்ட கோவிந்தராஜனுக்கு இப்படியா கோர விபத்து நேர வேண்டும்! 'அவன் எவ்வளவு நல்லவன். தங்கக் கம்பியல்லவா? கடவுளும் நல்லவர்களைப் பார்த்துத்தான் தன்னிடம் அழைத்துக் கொள்ள விரும்புகிறார் போலும்' என்று பலபடியாக வருந்தினான். பிறகு போலீசுக்குச் சென்று தான் இறக்கவில்லை என்று சொல்லி விஷயத்தை விளக்கி விட்டு வந்தான்.

நாளடைவில் அழகேசனுடைய மனோபாவத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. யார் பணத்தை வேண்டுமானாலும் கொடுக்காமல் ஏமாற்றலாம்; ஆனால் கோவிந்தராஜனைப் போன்ற பெருந்தன்மை வாய்ந்தவர்கள் பணத்தைக் கபளீகரம் பண்ணக் கூடாது என்று எண்ணினான். கோவிந்தராஜன் வாரிசுகள் யாராகிலும் இருக்கிறார்களா என்று தேடிப் பார்த்தான். ஒருவருமில்லை. ஆகவே, அந்தப் பணத்துக்கு கோவிந்தராஜன் ஞாபகார்த்தமாக ஏதாகிலும் செய்ய வேண்டும் என்று தீர்மானித்து இந்தத் தண்ணீர்த் தொட்டியை அழகேசனே கட்டினான்!—என்று சொல்லி என் அருகில் நின்ற நண்பர் ஒருவாறு முடித்தார்.

* * *

எனக்கு அந்தக் கதையைக் கேட்க வெகு ரஸமாயிருந்தது. "ஸார்! நீங்கள் யார் என்று எனக்குத் தெரியவில்லையே! நிறுக்கிடும் அழகோடு கதை போகும் போக்கைப் பார்த்தால் ஒரு வேளை நீங்களே அழகேசனோ என்று சந்தேகம்கூட உண்டாகிறது" என்றேன்.

"நான்தான் கோவிந்தராஜன்!" என்றார் அவர்.

"என்ன! இறந்துபோன கோவிந்தராஜனா? என்ன ஸார், சாடு திரிக்கிறீர்கள்?"

"கஷ்டத்திலேயும் சிரிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று நம் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். எனக்கு அழகேசன் என்று ஒரு நண்பர் இருக்கிறார். அவர் சுமார் இருநூறுரூபாய் வரை தரவேண்டும். அவராகக் கொடுப்பார் கொடுப்பார் என்று இரண்டு வருஷமாக எதிர்பார்க்கிறேன். ஆனால் அவராகக் கொடுப்பதாய் இல்லை. நானும் வாயைத் திறந்து கேட்க முடியாத ஒரு தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன். இந்த மன நிலையில் எதிரே தண்ணீர்த் தொட்டியில் என் பெயர் பொறித்திருக்கிறதா? இதையும் அழகேசனையும் சேர்த்து ஒரு கதை கட்டிப் பார்த்தேன். சிரிக்கத் தெரியவில்லை என்றாலும் கதையாகிலும் வருகிறதா என்று பார்த்தேன். என் கற்பனைக் கதை எப்படி?" என்றார்.

"கதை, பலே ஜோர்! ஏதாகிலும் ஒரு பத்திரிகையின் சிறு கதைப் போட்டிக்கு எழுதுங்கள். இரு நூறு ரூபாய்க்கு ஐந்நூறு ரூபாயாகப் பரிசு கிடைத்தாலும் கிடைக்கலாம்" என்று சொன்னேன். அதற்குள் பஸ்ஸும் வந்து விட்டது!

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 226. காணவில்லை என்று சொல்ல?

சீதையை நோக்கி மேலும் சொல்லு கிறான் அனுமன். "நீயோ மென்மை யான பூங்கொடி போன்றவள். ஆனால் என்னுடைய தோளின்மேல் சௌகரிய மாக இருக்கலாம். துயர் நீங்கினவ ளாய் உறங்கியும் விடுவாய்."

பொன்தி ணிபொ லங்கொ டி! என்
 மென்ம யிர்பொ ருந் திந்
துன்றி யபு யத்(து)இ னி(து)
 இருக்க துயர் விட் டாய்,
இன்து யில்வி ளைக்க,—ஓர்
 இமைப்பின் இறை வை கும்
குன்றி டையு னைக்கொ டு
 குதிப்பேன் இடை கொள் ளேன்.

[பொன்திணி பொலங்கொடி: பொன் மயமான அழகிய பூங்கொடி போன்றவளே; என் மென்மயிர் பொருந்தித் துன்றிய புயத்து: மென்மையான ரோமம் அடர்ந்து அமைந்துள்ள என் தோளின் மேல்; இனிது இருக்க: சௌகரியமாக நீ தங்கி யிருக்க; துயர் விட்டாய் இன்துயில் விளைக்க: துயர் நீங்கினவளாய் சௌகரியமாகத் தூங்க; ஓர் இமைப்பின்: ஒரு இமைப் பொழுதில்; இறைவைகும் குன்றிடை உனைக்கொடு குதிப் பேன்: ராமன் தங்கும் குன்றிலேயே உன்னைச் சுமந்து கொண்டவனாய் போய்க் குதிப்பேன்; இடை கொள்ளேன்: நடுவே தங்குவது என்பது கிடையாது.

குறிப்பு: மனுஷர்கள் வாகனமாக இருந்து மக்களை முதுகில் தூக்கிச் செல்வது பூர்வ காலத்தில் சாமான்ய வழக்கமாக இருந்தது. இப்போதும் ஹிமாலயப் பிராந்தியங்களில் அது வழக்கத்தில் இருக்கிறது.]

அனுமன் சீதையைத் தோளில் வைத் துத் தூக்கிக் கொண்டு போவேன் என்று சொல்லுவது வெற்றுரையல்ல, வின்னியாசமல்ல. 'அப்படியே ஒரு தாவில் குதித்து விடுவேன் இடையில் தங்க மாட்டேன்' என்று சொல்லுவ தெல்லாம் உறுதியையும் ஆத்திரத் தையும் காட்டும் வழக்குத்தான்.

***

"நான் உன்னைத் தூக்கிக் கொண்டு போகிறேன் என்பது தெரிந்து, அரக்கர்கள் தொடர்கிறது என்று ஏற்பட்டால் அவர்களை அப் படியே ஹதம் செய்து விடுவேன். அவர்கள்மேல் ஏற்படுகிற என் கோபத்தை யெல்லாம் தீர்த்துக் கொள்ளுவேன்."

அறிந்(து)இ டைஅ ரக்கர் தொடர்
 வார்கள் உள ரா மேல்,
முறிந்(து)உ திர நூறி, வளர்
 என்சி னம்மு டிப் பேன்:
நெறிந்த குழல்! நின்நி ைலமை
 கண்டு நெடி யோன் பால்
வெறுங்கை பெய ரேன். ஒ ருவ
 ராலும் விளி யா தேன்.

[முறிந்து உதிர நூறி: அவர்கள் எல் லாரையும் நொறிபட்டுச் சிதறுண்டு போகும் படியாகத் தாக்கி; வளர் என் சினம் முடிப் பேன்: என் நெஞ்சில் மேலும் மேலும் வளர்ந்து கொண்டிருக்கிற கோபத்தைத் தீர்ப்பேன் — அவர்களைக் கொல்லுவேன்; நெறிந்த குழல்: நெளிந்து சுருண்ட கூந்தலையுடைய தாயே; நின் நிலைமை கண்டு: இந்த உன் அபாயமான நிலைமை யைக் கண்டு விட்டு; நெடியோன்பால் வெறுங்கை பெயரேன்: ராமன்பால் வெறுங் கையோடு எப்படிப் போவேன்; ஒருவ ராலும் விளியாதேன்: யாராலும் சேதம் ஏற்படாது எனக்கு.]

***

சீதையை எடுத்துக் கொண்டு சொல்லாமல் ராமனிடம் போனால் என்ன சொல்லுகிறது என்ற திகைப்பு வருகிறது அனுமனுக்கு.

அருந்த தி! பு ரைத்தி,— அழ
 கற்(கு)அ ருகு சென்(று)'உன்
மருந்த னைய தேவி! நெடு
 வஞ்சர் சிறை வைப் பில்,
பெருந்து யரி னோடும், ஒரு
 வீடு பெறல் இல் லா(து)
இருந்த னள்' எ னப்ப கரின்
 என்அ டிமை என் னும்?

[அருந்ததி உரைத்தி: அருந்ததியைப் போன்ற அன்னையே சொல்: அழகற்கு அருகு சென்று: ராமனிடம் போய்: உன் மருந்து அனைய தேவி: தேவாமிர்தத்தைப் போன்ற உன் சீதை; நெடு வஞ்சச் சிறை வைப்பின்: வஞ்சிக்கிற தொழிலில் மிக்க திறம் படைத்த அரக்கர்களின் சிறையில் வைக்கப்பட்டவளாய்: ஒரு வீடு பேறும் இல்லாது: ஒருவகையான விடுதலையும் பெறுவது என்பது இல்லாது: இருந்தனள் எனப் பகரின்: இருக்கிறாள் என்று சொன்னால்: என் அடிமை என்னும்: நான் தொண்டு செய்கிறேன் என்பதில் பொருள் உண்டா?]

* * *

“ராமனிடத்தில் என்னத்தைச் சொல்ல; அரக்கர்களோடு போர் செய்தால் புண்ணுக்கு மேல் புண்ணாக என் தோள்களுக்கு ஏற்படும். அத்தகைய புண்களுக்கு உள்ளாகாத தோள்களோடு நான் சௌகரியமாய்ப் போய்ப் பகைவர்களுடைய பலத்தைப் பற்றி ராமனிடம் பிரசங்கம் செய்யவா? சீதையைக் கொண்டுவரவில்லை. ஆனால் என் உயிரை நன்றாகக் காப்பாற்றிக் கொண்டேன் என்று சொல்லவா?” என்கிறான் அனுமன்.

புண்தொ டர்(வு)அ கற்றி ய
புயத்தி னொடு புக் கேன்
விண்ட வர்வ லத்தை யும்வி-
ரித்து ரைசெய் கே னே!
கொண்டு வரு கிற்றி லென்.
உயிர்க்கு றுதி கொண் டேன்.
கண்டு வரு கிற்றி லென்
எனக்க ழறு கே னே!

[விண்டவர் வலத்தையும்: நம்மோடு ஒட்டாதவரான அரக்கர்களது திறத்தை: கொண்டு வருகிற்றிலென்: சீதையை நான் கொண்டு வரவில்லை; உயிர்க்குறுதி கொண்டேன்: அல்லது என்னுடைய உயிரை நன்றாய்க் காப்பாற்றிக் கொண்டேன்: கண்டு வருகிற்றிலென் எனக் கழறுகேனோ: அல்லது சீதையைக் காணவே இல்லை என்று நான் சொல்லுவேனோ?]

ஒரு வீரனுக்கு வாய் விட்டுச் சொல்ல முடியாத விஷயங்களை வெகு அழகாய் எடுத்துச் சொல்லியிருக்கிறது. “காணவே இல்லை என்று சொல்லுவது எவ்வளவு அடாத காரியம். அதைச் சொல்லும்படியாகவா செய்கிறாய் என்னை?” என்று அனுமனாகிய மகா வீரன் சொல்லுகிறான். அபூர்வமான பாவம் இது.

★ ★ ★

# சம்மதந்தானா?

ஆங்கிலப் பேராசிரியர் ஒருவர் பெண்ணைப் பார்த்தும் பேசியபின் பிடித்தால் தான் மணந்துகொள்ள முடியும் என்று தனக்குப் பெண்கேட்க வந்தவரிடம் சொன்னார்.

பெண்ணின் தகப்பனார் அதற்குச் சம்மதித்துப் பேராசிரியரைப் பெண் பார்ப்பதற்காக அழைத்துச் சென்றார்.

பேராசிரியர், பெண்ணைப் பார்த்ததும், “நான் தினம் டென்னிஸ் விளையாடுபவன். உங்களுக்கு டென்னிஸ் விளையாடத் தெரியுமா?” என்று கேட்டார்.

“தெரியும்” என்றாள் பெண்.

“சரி, உங்களுக்கு மோட்டார் ஓட்ட வருமா?”

“ஓ, பேஷாக வரும்!”

“வீட்டு வேலைகளிலும் பரிச்சயம் உண்டல்லவா?”

“கட்டாயம் உண்டு.”

“ஸ்கேட்டிங், டான்ஸ், பிலியர்ட்ஸ் முதலியவை.........?”

“எல்லாம் எனக்குத் தெரியும்.”

“அப்படியானால் உங்களை மணந்துகொள்ள எனக்குப் பூரண சம்மதம்.”

“அவசரப்படாதீர்கள். நான் கேட்கும் கேள்விகளுக்கும் பதில் சொல்லுங்கள். ஆமாம், டென்னிஸ் கோர்ட்டில் நீங்கள் எந்தக் கம்பெனியின் சாமான்களை உபயோகிக்கிறீர்கள்? நான் நல்ல மட்டைகளும் பந்துகளும் வைத்துக்கொண்டுதான் விளையாடுவது வழக்கம்.”

பேராசிரியர் டென்னிஸ் கோர்ட்டைக் கண்ணால் கூடப் பார்த்ததில்லை. என்ன பதில் சொல்லுவார்? வாயடைத்து உட்கார்ந்திருந்தார்.

“அது போகட்டும்; உங்கள் கார் என்ன மேக்? என் உபயோகத்துக்கு எந்தக் காரைத் தருவதாக உத்தேசம்?” என்று கேட்டாள் பெண்.

பேராசிரியருக்கு ‘கார்’ சம்பந்தமாக ஏதாவது தெரிந்தால்தானே சொல்வதற்கு?

“ஆமாம், உங்களுக்கு என்னென்ன டான்ஸ்களெல்லாம் தெரியும்?”

ஆசிரியர் மௌனம் சாதித்தார்.

“அது கிடக்கட்டும். உங்களுக்கு என்ன சம்பளம்?”

“இப்பொழுது இருநூறு ரூபாய் வாங்கிக் கொண்டிருக்கிறேன். அடுத்த வருஷத்தில் இருபத்தைந்து ரூபாய் இன்கிரிமெண்டு கிடைக்கும்” என்று அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு பதில் சொன்னார் பேராசிரியர்.

“மன்னிக்கவும். அப்படியானால் உங்களை மணந்துகொள்ள எனக்குச் சிறிதும் சம்மதமில்லை” என்று பதில் அளித்தாள் பெண்.

# தலைக்கு வந்தது...!

**சந்திரன்**

கோட்டும் கையுமாகத் தலை தெறிக்கும் வேகத்தில் ஸ்டேஷனை நோக்கி ஓடிக்கொண்டிருந்தான் சண்முகம். மின்சார வண்டியும் அவனுக்குச் சரியாக ஓடிவந்து ஸ்டேஷனில் நின்றது. அந்த வண்டிதான் ஆபீஸ் நேரத்துக்குச் சரியாகப் போகும் கடைசி வண்டி. நல்ல வேளையாக சண்முகத்துக்கு வண்டியும் கிடைத்து, அதில் உட்கார இடமும் கிடைத்தது. வியர்த்து விறுவிறுக்க, சண்முகம் உட்கார்ந்து ஒரு பெருமூச்சு விட்டுக் கையிலிருந்த புஸ்தகத்தைப் பிரித்தான். அச்சமயம் அவன் அருகில் நின்று கொண்டிருந்த ஒருவர் புத்தகத்தைப் பார்த்துவிட்டு, சண்முகத்தினிடம் பல்லைக் காட்டினார். புத்தகத்தை அவரிடம் கொடுக்காமல் சண்முகம் வேறு என்ன செய்வது?

வண்டி சேத்துப்பட்டு ஸ்டேஷனில் நின்று விட்டுப் புறப்பட்டது. ஒரு டிக்கெட் பரிசோதகர் வண்டியில் தாவி ஏறினார்; எல்லோரிடமும் தாண்டித் தாண்டி வந்து டிக்கெட் பரிசோதனை செய்தார். அவர் சண்முகத்தினிடம் வந்ததும் அவன் "பாஸ்!" என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டு எங்கேயோ பார்த்தபடியிருந்தான். டிக்கட் பரிசோதகரின் "காண்பியுங்கள்!" என்ற குரல் கேட்டதும் சண்முகம் சட்டைப் பையில் கைவிட்டான். அடாடா! அவனைத் தேள் கொட்டி விட்டதா என்ன! பின் என் அவன் அப்படிப் பதறுகிறான்! முகத்தில் அசடு வழிகிறதே!

"மறந்து விட்டேன், ஸார்! இன்று லாண்டரியிலிருந்து வந்த புது சட்டையைப் போட்டுக் கொண்டு பாஸை எடுத்துக் கொள்ளாமலே வந்து விட்டேன்!" என்று என்னென்னவோ சொன்னான். டிக்கட் பரிசோதகர் அவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டே டிக்கெட்டில்லாப் பிரயாணத்துக்காக அவன் கொடுக்கவேண்டிய அதிகப்படி சார்ஜுக்கு ரசீது தயார் செய்துவிட்டார். சண்முகமும் கௌரவத்தை விட்டுக் கொடுக்காமல் இரண்டு ரூபாயை எடுத்து நீட்டினான். பரிசோதகர் அதை வாங்கிக்கொண்டு சில்லறை தருவதாகச் சொல்லிவிட்டு மற்றவர்களுடைய டிக்கெட்டுகளைப் பரிசோதனை செய்ய ஆரம்பித்தார். அப்பொழுது அவருக்கு அறிமுகமானவர் ஒருவர் தென்படவே அவரிடமிருந்த புத்தகத்தை வாங்கி டிக்கெட் பரிசோதகர் படிக்கத் தொடங்கினார்.

அந்த நண்பர், "புத்தகம் என்னுடையதல்ல, ஸார்! அதோ கோடியில் உட்கார்ந்திருக்கிறாரே, அவருடையது!" என்றார்.

---

## வீட்டுப் பிரச்னை




ஜெயில் அதிகாரி (திருடனைப் பார்த்து):—என்னப்பா! கொஞ்ச நாட்களுக்கு முன்னால்தானே உன்னை விடுதலை செய்தோம். அதற்குள் இங்கே வந்துவிட்டாயே!

திருடன்:—ஆமாங்க, வந்து விட்டேனுங்க! குடியிருக்க இதைவிட நல்ல வீடாக வெளியிலே கிடைக்க வில்லைங்களே, எசமான்!

டிக்கட் பரிசோதகர் அவர் சுட்டிக் காட்டிய கோடி ஆசாமியைப் பார்த்தார். சண்முகம் தான் புத்தகத்துக் குரியவர் என்று தெரிந்தவுடனே, "அவருடையது தானே? நான் கொடுத்து விடுகிறேன்!" என்று சொல்லிவிட்டு, சண்முகத்தைப் பார்த்து, "ஸார்! நான் உங்களை அடுத்த ஸ்டேஷனில் சந்திக்கிறேன்" என்று சொல்லிப் பூக்கா ஸ்டேஷனில் இறங்கினார்.

கோட்டை ஸ்டேஷனில் இறங்கியவுடன் சண்முகம் காத்திருக்கும்படி வைக்கவில்லை டிக்கட் பரிசோதகர். மலர்ந்த முகத்துடன் வந்து இரண்டு ரூபாயை அவனிடமே திருப்பிக் கொடுத்து விட்டு, "என்ன ஸார், பாஸைத்தான் எடுத்துக் கொண்டு வந்திருக்கிறீர்களே! நல்ல வேளையாகப் போயிற்று! இல்லாவிட்டால் ரூபாயை தண்டம் அழுதிருக்க வேணுமே! இதோ! உங்கள் பாஸ், இந்த புத்தகத்திற்குள் இருந்தது, ஸார்!" என்று சொல்லிப் பாஸையும் புத்தகத்தையும் கொடுத்துவிட்டு ரயிலுக்குள் தாவினார்.

சண்முகத்திற்கு எல்லாம் ஆச்சரியமாக இருந்தது. நல்ல வேளையாக இரண்டு ரூபாய் தப்பிற்று என்ற சந்தோஷத்துடன் நடையைக் கட்டினான் ஆபீஸை நோக்கி.

அரை பர்லாங்கு நடந்திருக்க மாட்டான், கைதட்டும் சத்தம் பலமாகக் கேட்டது. திரும்பிப் பார்த்தான். ஓர் ஆசாமி வாயு வேக மனோ வேகமாக வந்து கொண்டிருந்தார். சண்முகம் அவரை உற்று கவனிப்பதற்குள் அவர் மேல் மூச்சு வாங்க சண்முகத்திடம், "ஸார், டிக்கட் செக்கர் புத்தகத்தைத் திருபிக் கொடுத்தாரா?" என்றார்.

சண்முகம், "ஓ, கொடுத்தார். அதைக் கேட்கவா இப்படி ஓடி வந்தீர்கள்?" என்றான் ஆச்சரியத்துடன்.

வந்த ஆசாமி, "இல்லை சார்! அதற்குள் என் ஸீஸன் டிக்கெட்டை வைத்திருந்தேன், ஸார்! பையில்லாத சட்டை, கையில் வைத்துக்கொண்டு படிக்க சிரமமாய் இருந்தது. அதனால் அதற்குள் வைத்திருந்தேன். அப்படியே அவரிடம் கொடுத்து விட்டேன், ஸார்! இறங்கினவுடன் தான் ஞாபகம் வந்தது" என்று ஏக்கத்துடன் பார்த்தார் சண்முகத்தை.

பேசாமல் சண்முகம் ஸீஸன் டிக்கெட்டை அவரிடம் கொடுத்து விட்டு "தலைக்கு வந்தது......" என்று முணுமுணுத்துக் கொண்டு நடையைக் கட்டினான்.

# வட்ட மேஜை

மதுரை
27—8—48

## விமோசனம் உண்டா ?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

ரிஜிஸ்தர் ஆபீஸில் வேலை செய்யும் என்னைப்போல் உள்ளவர்கள் என்ன பாவம் செய்தார்களோ! தினமும் எங்கள் வேலை அடித்தான் காப்பிதான். பதிய வரும் பத்திரங்களை அப்படியே பெரிய புஸ்தகத்தில் காப்பி அடிக்க வேண்டும். காப்பி அடிப்பது சுலபம் என்று நினைத்து விடாதீர்கள். எழுத்துக்கு எழுத்து சரியாக எழுதவேண்டும்!

பத்திரம் எழுதுபவர் யாவரும் தமிழில் பொது அறிவுடையவர்களாயில்லை. ஏதோ அவர்கள் கொஞ்சமேனும் அக்கறையுடன் பிழையின்றிச் சாதாரணத் தமிழில் எழுதுகிறார்களா என்றால் அதுவும் இல்லை. தம் மனம் போன போக்கில் பழைய பல்லவியுடன் இழுக்கி எழுதி, விஷயமறியாத பொது ஜனங்களிடம் தம்மைப் பற்றிப் பெருமையாகப் பேசி எழுத்துக் கூலி என்று வாங்கிக் கொள்ளுகிறார்கள். பத்திரம் எழுதுவதில் மிகவும் தேர்ச்சி பெற்ற ஒருவர் எழுதிய முதல் பாராவின் உள்ளமைத் தங்கள் கவனத்துக்குக் கொண்டு வரப் பிரியப்படுகிறேன். "இறுவாற வோத்தி பத்தறம் ரூ. 300 ஆயிரத்து துளாயிரத்து றுத்பெத் தட்டாம் வருஷம் ஆகஸ்டு மாசம் பிறுபெத்தட்டாம் தேய்திக்கு தமிள் சறுவதாறி வறு ஆவிணி மீ பதிமூன்றாம் வ."—இவ்விதமாக அவர்கள் விலை உயர்ந்த முத்திரைக் காகிதங்களில் எழுதிக் கொண்டு வரும் பத்திரங்கள் ரிஜிஸ்தர் ஆபீஸில் பதிவு செய்யப்படுகின்றன. சப் ரிஜிஸ்திரார் அவர்கள் தமக்குள்ள வேலைகளைக் கவனித்துச் சரி பார்த்துப் பதிவு செய்து எங்களிடத்தில் தள்ளிவிடுகிறார். நாங்கள் அவைகளைக் காப்பி அடித்துத் தொலைக்க வேணும்! அவர் எழுதியது பிரம்ம லிபியானாலும், நன்றாக யோசித்து கவனத்துடன் எழுதி முடிக்க வேண்டியது எங்கள் பொறுப்பு. ஒரு நாளுக்கு எத்தனை பத்திரங்கள்தான் இப்படி காப்பி அடிப்பது? இவைகள் அனைத்தும் சர்க்கார் கவனிக்க வேண்டும். கூடுமானவரையில் பத்திரம் எழுதுபவர்கள் கொஞ்சம் தமிழில் பிழையின்றி எழுதுபவர்களாக இருத்தல் வேண்டுமென்றும், இன்னின்ன பத்திரங்கள் இன்னின்ன முறைகளில் எழுதவேண்டுமென்றும் முறை வகுத்து இதுவரை காப்பி அடித்து எழுதிய கைகளுக்கு உதவி செய்யும்படி சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஏ. ஆர். கோவிந்தன்

சென்னை,
3—9—48

## வைத்தியப் பரிசோதனை

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு!

இன்றுவரை பல இலாகாக்களிலுள்ள ஏழைக் குமாஸ்தாக்களின் கண்ணீரும், கதறலும் பல பத்திரிகைகளின் வாயிலாக அறியலானோம். அதே போல் என் கணவரின் பரிதாப நிலைமையை எல்லோருக்கும் தெரியப்படுத்த விரும்புகிறேன். அவருக்குத் தற்போது வயது 36, தம்முடைய 24வது வயதில் 'டிபார்ட்மென்ட் ஆப் இன்டஸ்டிரீஸ்'ஸில் குமாஸ்தாவாக நுழைந்தார்.

அவர் 12 வருடம் வேலை செய்தும் வேலை சாசுவதம் ஆகவில்லை. சிறிது காலத்துக்குமுன் தான் அவரை 'வைத்தியப் பரிசோதனை'க்கு அனுப்பினர். அப்பொழுது அவருக்குக் கண் பார்வை கொஞ்சம் மங்கியிருந்தது. டாக்டர் அவரைப் பரிசோதனை செய்து 'அன்பிட்' செய்து விட்டார். ஆகையால் அவர் வேலையை இழக்க நேரிட்டது. இந்த 36வது வயதில் அவர் என்ன செய்ய முடியும்? இந்தக் கடின காலத்தில் இரு குழந்தைகளையுடைய நாங்கள் எப்படி வாழ்க்கை நடத்த முடியும்? வேறு சர்க்கார் உத்தியோகத்திற்குப் போகத் தகுந்த வயதும் இல்லை. டிபார்ட்மென்ட்டுக்குள் நுழையும் போதே அவரை 'மெடிகல் பிட்'டிற்கு அனுப்பினால் அவருக்கு வேலை போயிருக்க நியாயமில்லையல்லவா! ஆகையால் இனிமேலாவது மற்றவர்கள் டிபார்ட்மென்டுக்குள் நுழையும் போதே மெடிகல் பிட்டிற்கு அனுப்பி வேலைக்கு ஏற்றுக் கொள்ளும் முறையைச் சர்க்கார் கையாளுவார்களா?

வி. வி. ருக்மணி.

ஒன்னகரை
1—9—48

## கர்ணங்களின் குறை நீங்குமா ?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

கிராம உத்தியோகஸ்தர்களாகிய எங்களுக்குச் சர்க்கார் கணக்குகள் எழுதுவதற்குப் பாரங்கள் சரிவர சப்ளை செய்வதில்லை. பாரங்கள் சப்ளை ஆகவில்லையென்று எத்தனை ரிபோர்ட்டுகள் தாலுகாவுக்கு எழுதினாலும் ரெவின்யூ அதிகாரிகள் கவனிப்பதில்லை. ஆனால் காலா காலத்தில் கணக்குகள் தயார் செய்யாத கிராம உத்தியோகஸ்தர்கள் மீது மட்டும் கடுமையான நடவடிக்கையும் எடுத்து அபராதமும் விதித்து விடுகிறார்கள். பாரங்கள் சப்ளை ஆகவில்லையென்று சொன்னால், சர்க்காரிலேயே காகிதப் பஞ்சமென்றும் தன் சொந்தச் செலவில் விலைக்கு வாங்கிக் கணக்குகள் தயார் செய்ய வேண்டுமென்றும் சொல்லிவிடுகிறார்கள். கணக்கு தயார் செய்வதற்கு 150 200 பாரங்கள் வேண்டியிருக்கின்றன. கடையில் காகிதம் வாங்கப் போனால், ரூ. 5. ஆகிறது. எங்களுக்குக் கிடைக்கும் ரூ. 23. சம்பளத்தில் வருஷத்தில் சரி பாதிக்குமேல் தாலுக்கா சம்மன்களுக்கும் காகிதங்களுக்கும் செலவிட வேண்டியிருக்கிறது என்றால் பிரதி மாதமும் இந்தச் சம்பளத்தையே நம்பியிருக்கும் கர்ணங்களின் பொருளாதார நிலைமையை என்னவென்று சொல்லுவது? இனியாவது கிராமத்திற்கு வேண்டிய பாரங்கள் காலா காலத்தில் கொடுத்தால் சர்க்கார் வேலைகள் தாமதமில்லாமல் நடக்கும்.

எம். ஆர். தத்தாத்ரேய ஐயங்கார்.

திருத்துறைப்பூண்டி
31—8—48

## சர்க்கார் கவனிக்குமா?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

மழை பெய்வதற்கும், நிழல் கொடுப்பதற்கும், முக்கிய காரணமாயிருக்கும் மரங்களை மக்கள் பூண்டோடு அழிக்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்களே யொழிய ஆக்க வேலையில் ஈடுபட முன் வரவில்லை. இந்த நஷ்டத்தை ஈடு செய்ய "சுதந்திர தின" ஞாபகார்த்தமாக ஏராளமான மரங்களை வைத்துப் பயிர் செய்து காப்பாற்றும்படி சர்க்கார் உத்தரவிட்டிருப்பது சந்தோஷத்துடன் வரவேற்கத் தக்கதே!

இதை முன்னிட்டு எங்கள் கிராமத்திற்கும் கதி மோட்சம் கிடைக்கு மென நம்புகிறேன். திருத்துறைப்பூண்டி ரயில்வே நிலையத்திலிருந்து, மேற்கே எட்டு மைல் தூரத்தில் உள்ளது எங்கள் கிராமம். நூற்றுக் கணக்கான மூட்டை வண்டிகளும், சவாரி வண்டிகளும் செல்லும் பிரதானமான சாலை பாலைவனம் போல் காட்சி அளிக்கிறது. வெய்யிற் காலத்தில் பிரயாணிகள் ஒரு மூச்சில் ஓடி விட்டுத்தான் போய் வர வேணும். ஏன்? சாலையில் வெய்யிலுக்கு ஒதுங்க ஒரு மரமாவது இருந்தால்தானே?

இவ்வூரைப் போல் உள்ள ஒவ்வொரு கிராமத்திலும், நகரத்திலும் உள்ள பிரதான ரஸ்தாக்களில் நிழல் தரும் மரங்களை வைத்துப் பயிர்செய்ய சர்க்கார் ஏற்பாடு செய்வார்களானால், இப்போது நாட்டப் பெறும் மரங்கள் நம் நாட்டின் "சுதந்திர" வெற்றிச் சின்னங்களாக அசோகன் நாட்டிய விருக்ஷங்களைப் போல் என்றும் அழியாமல் நிலவும் என்பதில் ஐயமில்லை.

கே. ராமசாமி.

பூனா
26—8—48

## ஏன் இந்தக் கவனக் குறைவு?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

நான் இந்த மாதம் G. I. P. ரயில்வே செக்ரெட்டரிக்கு 'அப்ளிகேஷன் பாரத்'திற்காக ரூ. 1 மணியார்டர் செய்தேன். அப்ளிகேஷன் பாரத்திற்குப் பணம் 20-ந் தேதிக்குள்ளும், அப்ளிகேஷன்கள் 26-ந் தேதிக்குள்ளும் ஆபீஸுக்குப் போய்ச் சேர வேண்டும் என்று பேப்பரில் கண்டிருந்தது. நான் இம்மாதம் 6-ந் தேதியே ரூ. 1. அனுப்பி விட்டேன். மணியார்டர் பணம் பெற்றுக் கொள்ளப்பட்டு ரசீதும் வந்துவிட்டது. ஆனால் இன்னும் அப்ளிகேஷன் பாரம் வரவில்லை. இன்று தேதி 26 ஆகிவிட்டது. பணமும் வரவில்லை. ஏதோ அனுப்ப மறந்து போய் விட்டார்கள் என்று எண்ணலாம். ஆனால் சென்ற மாதமும் ரூ. 1. அனுப்பி அதற்கும் பாரம் வரவில்லை. ஏழையாகிய என் பணம் இவ்வாறு சென்றால் நான் என்ன செய்வது?

என். ராமகிருஷ்ணன்.

சென்னை
6—9—48

## மறுப்பார்களா?

"கல்கி" ஆசிரியரவர்களுக்கு,

மேன்மை தங்கிய கவர்னர் ஜெனரல், ஸ்ரீமான் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்கள், சமீபத்தில், சென்னையில், எதிராஜ் பெண்கள் கலாசாலையில், பெண்களுக்கு புத்திமதி கூறினார். பெண்கல்வி பற்றியும், அவர்களுடைய பொறுப்புப் பற்றியும் மிகவும் உருக்கமாக எளிய நடையில், எடுத்துச் சொன்னார். பெண்களும் அவருடைய அருமையான பொன் மொழிகளைப் பின் பற்ற உறுதி கொண்டிருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.

இதற்கு மாறாகச் சென்னைச் சட்டசபையில், அரசாங்க எக்ஸ்பிரஸ் பஸ்களில், பெண் கண்டக்டர்களை நியமிப்பது பற்றி விவாதம் பலமாக நடந்துவருகிறது. நாம் நமது இந்திய கலாசாரப் பிரகாரம், நம் நாட்டுப் பெண்களை நடத்தாமல் மேல் நாட்டு முறைகளைப் பின்பற்றப் பார்க்கிறோம். அது நமது கலாசாரத்திற்கே மிகவும் கேடு விளைவிப்பதாகும்.

சாதாரணமாக, ஒன்றுமறியாத ஒரு கிராமவாசி கூட ஒரு நவீன மங்கையைப் பார்த்தால் மயங்குகிறான். காரணம் என்ன? அவளும் ஒரு பெண்தானே! ஆனால் நவீன மங்கையின் அலங்காரம் அவனுக்குப் புது மாதிரியாக இருக்கிறது. புது வஸ்துவின் யாவரும் மோகிப்பது இயற்கைதானே?

ஆகவே, பெண்களை பஸ் கண்டக்டர்கள் போன்ற வேலைகளில் நியமிப்பது உசிதமில்லை. அதனால் எத்தனையோ விதமான கெடுதல்கள் நேரக்கூடும். பெண் தெய்வமென்று கொண்டாடப்படும் பாரத நாட்டுப் பெண்மணிகள் இழிவான நிலைமையை அடையக் கூடும்.

பெண்கள், உபாத்தியாயினி, நர்ஸ், சிகிச்சாலகர்கள் போன்ற தேச சேவைக்கான காரியங்களில் பங்கெடுத்துக் கொள்ளலாம். ஆனால் பெண்களுக்கு உகந்த தல்லாத வேலைகளில் அவர்களை நியமிக்கக் கூடாது என்பது எனது அபிப்பிராயம். பொது ஜனங்களும் இதை மறுக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

கே. நடராஜன்.

நாமக்கல்
28—8—48

## இது என்ன நியாயம்?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

23—8—48 அன்று 23 பேர் செங்கல்பட்டு ரயில்வே ஸ்டேஷனில் ரயில்வே லயனைக் கடந்ததாகக் குற்றம்சாட்டப்பட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப் பட்டோம். எங்கள் விவரங்களைப் பதிவு செய்து கொண்டிருக்கும் பொழுது, ஒரு போலீஸ் கான்ஸ்டபிள் இன்ஸ்பெக்டரை அணுகிக் குறிப்பாக ஒரு ஆளை விட்டுவிடும்படி கேட்டுக் கொண்டான். இன்ஸ்பெக்டரும் அந்த போலீஸ்காரனின் சிபாரிசின் பேரில் அவனை விட்டுவிட்டார். நான் இன்ஸ்பெக்டரை அணுகி "ஏன் அவரை மட்டும் விடுதலை செய்கிறீர்கள்?" என்று கேட்டதற்கு, அவர் "அது என் சொந்த விஷயம்; அதில் நீ தலையிடுவது அனாவசியம்" என்று ஆணித்தரமாகப் பதில் அளித்தார்.

குற்றம் யார் செய்தாலும் குற்றமே. எத்தனை பெரிய உத்தியோகஸ்தரா யிருந்தாலும் சரி, அவர்களுக்குச் சட்டம் விதிவிலக்கு அல்ல. ஜனநாயக சர்க்கார் நடக்கும் இக்காலத்தில் பொதுஜன ஊழியர்களான சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் நியாயத்திற்கு விரோதமாக நடப்பது அழகல்ல.

நா. வி. ஸ்ரீ. ராகவன்

---

✱ இந்த இதழில் வெளியாகி யிருக்கும் வட்டமேஜைக் கடிதங்களில் மதுரை எ. ஆர். கோவிந்தன் அவர்கள் எழுதியிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25 பரிசளிக்கப்பட்டது.



# கடிதம் எழுதாதே!

### கோணல்

அன்புள்ள பிராணபதிக்கு,

அம்புஜம் அனேக நமஸ்காரம் செய்து எழுதிக் கொண்டது. எனக்கு சதா தங்களைப் பற்றியும் தங்கள் உடம்பைப் பற்றியுமே கவலையாய் இருக்கிறது. இந்த ஊரில் இருக்கும்போதே உங்கள் நினைவு உங்களிடமிருக்காது. தெருவில் நடக்கும்போது எதிரில் வரும் மாடு, மனிதர் எதுவும் உங்கள் கண்ணுக்குப் படாது. சதா டிராமும் பஸ்ஸும் ஓடிக்கொண்டிருக்கும் பட்டணத்தில் நீங்கள் எப்படி ரோட்டில் நடக்கிறீர்களோ? என் மனது திக்கு திக்கென்று அடித்துக்கொண்டிருக்கிறது சதா காலமும். போதாததற்குச் சதா என் நினைவாகவே இருப்பதாக வேறு எழுதியிருக்கிறீர்கள். நடக்கும் போது ஜாக்கிரதையாக எதிரில் வருவதைப் பார்த்து நடந்து போங்கள். உடம்பைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளுங்கள்.

நேற்று நான் ஒரு சொப்பனம் கண்டேன். அதிலிருந்து எனக்கு இன்னும் திகிலாக இருக்கிறது. பகலில் தான் சொப்பனங்கண்டேன். அது பலிக்காமலிருக்க வேணுமே என்று கவலையாயிருக்கிறது. நேற்று மத்தியானம் எனக்கு ஒரே தாகமாய் இருந்தது. ஒரு டம்ளர் தீர்த்தத்தை எடுத்துக் குடித்தேன். அப்புறம் அப்படியே தூங்கி விட்டேன். நான் அடிக்கடி, சாதம் சாப்பிடும் போதும் கிணற்றிலிருந்து தண்ணீர் இழுக்கும் போதும் என்னையறியாமல் தூங்கிவிடுவது வழக்கம். நேற்று தீர்த்தம் குடிக்கும்போது தூங்கியது எனக்கே அதிசயமாய்த்தானிருக்கிறது. திடீரென்று என் மூக்கில் தண்ணீர் விழுந்து புரையேறவே சட்டென்று விழித்துக் கொண்டேன். ஒரு நிமிஷம்தான் தூங்கியிருப்பேன். அதற்குள் ஒரு பயங்கரமான கனவு! அதை எனக்கு எழுதவே பயமாய் இருக்கிறது. இருந்தாலும் சொல்லுகிறேன் கேளுங்கள்!

உங்களுக்குத்தான் சதா என் ஞாபகமாகவேயிருக்கிறதா? அதனால் உங்களுக்கு ஆபீஸில் கொஞ்சம் கூட வேலை ஓடவேயில்லை. மானேஜர் உங்களை ஏதோ கேட்க வேண்டுமென்று கூப்பிடுகிறார். நீங்கள் உங்கள் மேஜையிலிருந்தபடியே 'இதோ வந்துட்டேண்டி கண்ணு!' என்கிறீர்கள். நீங்கள் என்ன செய்வீர்கள், பாவம்! பட்டணத்திலிருக்கும் பெண்களைத் தவிர மற்ற எதைப் பார்த்தாலும் என்னைப் போலவே இருக்கிறது என்றுதான் எழுதியிருந்தீர்களே! இது உங்கள் மானேஜருக்கு எப்படித் தெரியும்? அவர் உங்களை அடிக்காத தோஷமாய் வாயில் வந்தபடியெல்லாம் திட்டுகிறார். நீங்களும் நான் திட்டுவதாகவே நினைத்துக் கொண்டு பேசாமலிருந்து விடுகிறீர்கள்.

சாயங்காலம் ஆபீஸ் விட்டவுடன் காப்பி ஹோட்டலுக்குச் சென்று காப்பி டிபன் சாப்பிட்டு விட்டுச் சில்லறை கொடுக்காமலேயே வெளியே வந்து விடுகிறீர்கள். ஹோட்டல் நாயர் நீங்கள் 'வருகிறேன்' என்று சொல்லுவதையும் காதில் வாங்காமல் உங்கள் தோளைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு போய் தன் முதலாளி எதிரில் நிறுத்துகிறான். நீங்கள் அவன் திட்டிய திட்டுகளை லக்ஷியம் செய்யாமல் காசைக் கொடுத்து விட்டு வருகிறீர்கள். என்னுடைய ஞாபகத்திலேயே நீங்கள் ஏதேதோ சாப்பிட்டு விட்டபடியால் கையில் இரண்டணாத்தான் பாக்கியிருக்கிறது.

பஸ்ஸிற்காக ரொம்ப நேரம் காத்துக் கொண்டு நிற்கிறீர்கள். புரசைவாக்கம் பஸ் காலியாக வருகிறது. அப்பொழுது நீங்கள் என் ஞாபகமாயிருப்பதால் அதை

விட்டு விடுகிறீர்கள். பின்னால் மயிலாப்பூர் பஸ் வருகிறது. அதில் அசாத்தியக் கூட்டம்! போதாததற்குக் காத்துக்கொண்டு நின்றவர்கள் வேறு முண்டி யடித்துக்கொண்டு ஏறுகிறார்கள். நீங்களும் அவர்களோடு சிரமப்பட்டு ஏறிக் கூட்டத்தில் தொங்கிக் கொண்டே நிற்கிறீர்கள். அப்பொழுது எதிரில் உட்கார்ந்திருந்த ஒரு கிழவர் உங்கள் கண்ணில் படுகிறார். அவர் முகம் என் முகஜாடையாகவே இருப்பதால் அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள் வைத்த விழி வாங்காமல். கண்டக்டர் 'ஸார்! டிக்கட்' என்கிறான். பையில் கிடந்த இரண்டணாவை எடுத்துக் கொடுக்கிறீர்கள். அவன் ஏதோ கேட்கிறான். நீங்கள் கிழவரைப் பார்த்துக் கொண்டே தலையை ஆட்டுகிறீர்கள். அவன் ஒரு டிக்கட்டைக் கிழித்து உங்களிடம் கொடுக்கிறான். மயிலாப்பூர் வந்ததும் கிழவர் இறங்குகிறார். நீங்களும் இறங்குகிறீர்கள்.



மனைவி :—நான் ஷேம்பியாக்க.........என்ன இது! நான் டிரஸ் பண்ணிக்கொள்ள போனதுக்கு முன்னாலே நானே ஷேவ் பண்ணிக் கொண்டீர்கள்!

கணவன் :—நீ டிரஸ் பண்ணிக்கொண்டு வரத்துக்குத்தான் ஒரு யுகம் ஆகிறதே. இரு! இரு! நான் இன்னொரு தடவை ஷேவ் பண்ணிக் கொண்டு வந்துவிடுகிறேன்.

அப்பொழுதுதான் உங்களுக்கு புரசைவாக்கம் போவதற்குப் பதிலாக மயிலாப்பூர் வந்துவிட்டது தெரிகிறது. என்ன செய்வது? மறுபடியும் பஸ்ஸிலேயே புரசைவாக்கம் போகலாமென்றாலும் கையிலே காசில்லை. நடந்தே போகலாமென்று எண்ணி டிராம் பாதை வழியாக நடக்கிறீர்கள்.

வழியில் எவ்வளவோ ஆபத்து. இரண்டு பஸ்களிலும் ஒரு லாரியிலும் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்புகிறீர்கள். ஒரு டிராம் உங்களை உராய்ந்து கொண்டு போகிறது. உடனே ஒரு போலீஸ்காரன் நீங்கள் நடை பாதையை விட்டு டிராம் லயனுக்குக் குறுக்கே நடந்ததாக வாயில் வந்தபடி திட்டி, ஒன்றும் செய்யாமல் மன்னித்து விடுகிறான். பிறகு எவ்வளவோ மனிதர்கள் மீதும், ரிக்ஷாக்களின் மீதும் மோதிக் கொண்டே கிட்டத்தட்ட புரசைவாக்கத்திற்கே வந்து விடுகிறீர்கள். ஆனால் யாரோ ஒரு பாவி சைக்கிளில் உங்களுக்கு எமனாக வந்து சேருகிறான். திடீரென்று உங்கள்மீது சைக்கிளைக் கொண்டுவந்து மோதுகிறான். நீங்கள் முழங்காலிலும் தலையிலும் அடிபட்டு மூர்ச்சையாகி......

ரகுராமன் தன் மனைவியிடமிருந்து வந்த இக்கடிதத்தைப் படித்துக்கொண்டே தெருவில் நடந்து வந்துகொண் டிருந்தபோது அவன்மீது திடீரென்று ஒரு சைக்கிள் மோதியது. முழங்காலிலும் தலையிலும் அடிபட்ட அவனைச் சிலர் சமீபத்திலுள்ள ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்தனர். அது மட்டுமல்ல, நடை பாதையை விட்டு நடந்ததால் அவன்மீது வழக்கும் தொடருவதற்கு இருந்தது. ஆஸ்பத்திரியிலிருந்தபடியே அவன் தன் மனைவிக்குப் பின்வரும் கடிதம் எழுதினான் :—

அம்புஜத்திற்கு ஆசீர்வாதம்! உன் பகல் கனவு பலித்து விட்டது. நான் இப்பொழுது ஆஸ்பத்திரியில் இருக்கிறேன். நீ மாத்திரம் இனிமேல் பல் தேய்க்கும் பொழுதும் தண்ணீர் குடிக்கும் பொழுதும் தயவு செய்து தூங்காதே. அப்படியே உன்னையறியாமல் தூங்கி விட்டாலும் இப்படியெல்லாம் கனவு காணாதே. அப்படி ஏதாவது கனவு கண்டாலும் கொஞ்சம் பெரிய மனது வைத்து எனக்கு அதை விவரித்து எழுதாதே!

இப்படிக்கு,
எப்பொழுதும் உன்னை மறவாத,
ரகுராமன்.

அவன் ஆடைகள் எப்பொழுதையும்விட

அதிக வெண்மையாகக் காண்கின்றன

அது ஸன்லைட்டி-ஞல்

தான்!




# ஸன்லைட் சோப்

[illegible] அலைக்காமலே துணிகளை
வெண்மையாகச் சலவைசெய்கிறது

3. 93-111 TM



## நாள் முழுவதும் குதூகலம்தான்!

நியதியின்படி-காலையிலிருந்து இரவு வரை-எக் கவலையுமில்லாமல் உத்ஸாகத்துடன் இருக்கலாம். ஆனால்-குடல் சரிவர சுத்தம் செய்யப்படா விட்டால், வெறுப்பும், கடுகடுப்பும் ஏற்படுவது இயற்கையே. ஆகையால், உடலின் இயற்கை நியதிகளைப் பாதுகாக்கும் பொருட்டு, புத்திசாலிகளான எல்லா தாய்மார்களும் தங்கள் குழந்தைகளுக்கு காலாகாலத்தில் இந்த மிருதுவான போனோமின்டை கொடுப்பார்கள்.

சுத்தமான மலமிளக்கும் உன்னத சஞ்சீவி

ரூ. 1—2—0 ரூ. 0—7—0 ஆகிய இரு சைஸ்களில் எங்கும் கிடைக்கும்.

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜெண்டுகள்:

ஓரியண்டல் மார்க்கண்டைல் ஏஜன்ஸி,
99-A, அரமனைக்காரத் தெரு, சென்னை

**BONOMINT**
LAXATIVE
CHEWING GUM

No 4

# எபிட்ரெக்ஸ்

கீழ்க்கண்ட உபாதைகளுக்கு
கைகண்ட மருந்து

* கக்குவான்
* ஆஸ்துமா
* மார்ச்சளிநோய்
* நெஞ்சுக்கோளாறுகள்



ஆசுவாசப்படுத்துவது. கனைப்பதை சாந்தப்படுத்துவது.

இது ஒரு அலெம்பிக் தயாரிப்பு

# ஓரியண்ட்

சிகரெட்

ORIENT

10 CIGARETTES

Cigarettes



பாகெட்
4 அணா
டின் 1-4-0
வரி அலாதி

ACI

நேஷனல் டுபாகோ கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Pres
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

